உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பூவாளூர்ப்புராணம்.

---

திருக்கைலாசபரம்பரை சிவாகமசித்தாந்த
சைவசமயாசாரியபீடமாய் விளங்காநின்ற
திருவாவடுதுறையாதீன
மஹாவித்துவான்

## ஸ்ரீ கச்சியப்பசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியது.

---

இஃது
மேற்படியூர் செட்டிப்பத்த சனங்களின்
வேண்டுகோளின்படி
அவர்களுள் ஒருவராகிய
திரிசிரபுரம்
சி. தியாகராசசெட்டியாரால்

சென்னை:
மிமோரியல் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

---

த [illegible] மாசிமீ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

---

கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

## சாமிநாத ஐயரவர்களாலியற்றப்பட்டது.

---

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

குலம்பூத்த குழக்கன்றை யிழந்தலமந் தலறுமி ந்தக்கோவின் யானும், அலம்பூத்த துயருறுவ தல தியற்ற லென்னேயென் றமைச்சர்க்கோதி, நலம்பூ த்த தனதுகுலக் கொழுந்தின்மிசைச் சயந்தனத் தை நடத்தி நல்லோர், புலம்பூத்த முறைநிறுவு ம னுவேந்தன் புரந்தருளும் பொன்னி நாட்டில். (௧)

இனமார்ந்த பசுநிரையை வசமாக்க வேய்ங்குழ லை யிசைத்தே பான்முன், முனமார்ந்த வனமாலை யணிமாயன் றினநாணின் முழுகி யேங்கக், கனமா ர்ந்த வைம்பதமும் வேய்ங்குழலி னமைத்திசைத் துக் கசியு மன்பர், மனமார்ந்த பசுபதியை வசமாக்கி னோர்வருமங் கலத்தின் கீழ்சார். (௨)

வீற்றிருக்கு பேன்மையது தவத்துறையா இயந்த லங்கண் மேவப் பாங்கர், ஏற்றிருக்குந் தகையதெழு

பதுமுனிவர் சிவப்பேறெய் தியது திஙகட், கிற்திரு க்குரு சடையினன்குங் குமதனசுங் தரிபாகன் திரு மன்பர்,போற்றிருக்கு மஞ்செவியன் வீற்றிருக்கு ம் பெருமையது பூவாளூரால். (௩)

மணமலிபைங் துணர்பொதுளும் பொழில்சுலவ ப் பூவாளூர் பான்மியத்தைக், கணமலிபல் லணிதிரமபு நிதியொன்று பெற்றனமாற் கழிவென்றே, யுணமலிவா னமுதனைய கவிவலவ ரியுமாப்ப வுரைக்குந் தோறுங், குணமலியின் சுவைகுதிகொள் செந்தமிழின் மொழிபெயர்த்துக் கொடுததிட்டாளுடு

அனையபெருந் திறற்புலவர் பெருமான்யா ரெனிற்றன்பா லடைந்தோாககெல்லாம, இனையல்புரி பசுத்தன்மை யகற்றுபுபே ரின்பநல மியைக்குமாற்றைத், தனைபனைய விமையமட மயிறனகருப் பசுத்தன்மை தணப்பித் தின்பந், துனையவியை தரப்புரிந்து விளக்குதிரு வாவடுதண் டுறைமூதூரில். (௫)

பரிசுபெற வுட்புகுவோர் பரிசுபெற்று வெளிவருவோர்ப் பார்த்து நீவிர், அரசரெந்த நாட்டினுக்கென் றிடச்சிலரின் றிங்கரச ராளே மீங்கு, விரசுமுன மேயரச ரிவர்முன்னம் யாமுமிடி வேந்த ரென்றே, யிரசமுற வெதிர்விடுக்கும் விதம்பெரிய கொடைச்செல்வ மியைந்த தாகி. (௬)

ஆங்கொருசார் சிலரிருந்து மாணுக்கர்க் கியற்றமிழை யன்பிளுேத, ஆங்கொருசார் சிலரிருந்து வடமொழிநூல் பிறவாத மாற்றி மேவ, ஆங்கொ

ருசார் சிலரிருந்து சிவபுராணக்கதைக ளமிழ்ந்திற்
சொல்ல, ஆங்கொருசார் சிலரிருந்து முப்பொருளி
னியல்பேற வமைந்த தாகி. (௭)

தண்ணியவாரியமொழியுந் தமிழ்மொழியும் யா
ம்புரிமா தவப்பேறென்றே, கண்ணியகங் களிதுளு
ம்புங் கவினுடைத்தா யருட்சைவா கமத்தை யாரா
ய்ந், தெண்ணியள வளவுபுரா மிருத்தலன்றி பொ
ருவீடு மிச்சி யாத,மண்ணியமா மணியனைய முனிவ
ரர்கட் கிடமாய மடால யத்தில். (௮)

வதிந்தருள்பஞ் சாக்கரதே சிகன்கருணைக் கடன்
முழுகி வடசொல் லோடு, முதிர்ந்தசுவைத் தென்
சொல்லு மாயகடல் கடைந்தறிவின் முதிர்ந்த சார
ம், பொதிந்தமைதி ராவிடபா டியவமிழ்த மளித்த
ன்பு பொருந்தே னுள்ளும், பதிந்திலகு சிவஞான
யோகியெனும் பாற்கடலிற் பருகு கொண்மூ. (௯)

அன்னசிவ ஞானயோ கிகளுமகிழ்ந் ததிசயிப்ப
வணிமுன் யாவு, மன்னவமை பலகவிக ளொருநொ
டியி லெளிதுரைக்கும் வாகை மேயோன், முன்ன
வமை முப்பொருளி னியல்பையடுத் தவர்க்கழகா
மொழிதல் வல்லோன், பன்னவமை கச்சியப்ப மு
னிவர்பெரு மானென்னும் பஃமை யோனே. (௰)

அந்தநகர் மான்மியத்தை யழகியவச் சினிலமை
வித் தளிப்பா யென்று, சுந்தரவத் தலத்தமலனடி
க்கன்பு பூண்டொழுகு தொண்டர் வேண்ட, நந்த
மது புண்ணியந்தா னிருந்தபடி யிதுவெனவுண் ண

ளியு வந்து,சிந்தலிலா தாய்ந்துகா விதெவழுக் கலை ந்தச்சிற் சேர்த்திங் தாறைல். (கக)

நலம்படைத்த சிதம்பரவே ளிதம்பெறப்பன்னு ளியற்று நற்ற வத்தாற், குலம்படைத்த பேறெனவே வந்துதித்த குணக்குன்றங் கோதி லாத, புலம்படைத்த பெருமையன்புண் ணியபுருட னியற்றமிழும் புதியிற் றேய்ந்தே, பலம்படைத்தீ பொருணயமாம் பலமணிகொண் டுவந்துறையும் பான்மை மிக்கோன். (கஉ)

புலியரசர் புகழ்பெருமை மீனாட்சி சுந்தரப்பேர் பூண்ட நாவன்மைக், கவியரசி னிடைக்கற்ற கடிமலர்க்கற் பகமெனது காம தேனு, சவியமையக் கல்லாப்புன் புலமைவனத் தினைத்தானே தடிந்து மேவும், நவியமடுத் தவர்களைத்தன் போலாக்குந் தன்மைபூரீஇ நகுமா மேரு. (கங)

நத்தனைய ளுதியர்கள் பணிந்தேத்தும் பூவாளூர் நடாச சற்கு, நித்தியமா திகளென்றுந் தணவாது நடப்பவிளை நிலங்கண் மேன்மை, பொத்திப்புண்ணியவழிதா னீட்டுபொருள் கொடுவாங்கிப் பொருத்து நல்லோன், சத்தியநா வினனினிமைத் தியாகரா சப்பெயர்கொ டமிழ்வலோனே. (கச)

முற்றிற்று

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பூவாளூர்ப்புராணம்.

## பாயிரம்.

### விநாயகர்.

திருமாலும் பிரமனுமற் றமரருந்தா மலர்வேதச் சிரத்தெஞ் ஞான்று, மொருவாத பிரணவத்தி னுரியபொருளொருதானென் றுலகந் தேற, மருவாரு மலர்க்கொன்றை மன்னவனப் பிரணவமால் களிறாய்த் தந்த, பெருவாழ்வு தருங்களிற்றின் கிடமாகு மெனதுள்ளப் பிறங்கன் மாதோ.

### பரசிவம்.

செம்பொன்னை வளர்தழலிற் செறித்துநவை தீர்த்தெடுக்குஞ் செல்வர் போல, வம்பொன்செய் மணிமவுலி யரிக்குமலர்த் தவிசிருக்கை யயற்கு மேனாட், பைம்பொன்செய் யுலகினர்க்கும் பாரினர்க்கும் பலவுயிர்க்கும் பவங்க ணல்கித், தம்பொன்செய் பதமருளுந் தனிமுதல்வ ரவரவரைச் சார்ந்து வாழ்வாம்.

பராபரை.

மணியொளியு மலர்மணமும் வயங்கிரவிக் கதிரு
மதிக்கலையும் போலத், துணிவருளூரு சிவபெருமா
னுடன்பிரியாத் தனதியல்பைத் தொல்லையான்மாப்,
பிணியொருவ வெடுத்தருளுந் திருமேனி யிடத்து
மெய்ப் பிறங்கக் காட்டி, யணிவிரவி வீற்றிருக்கும் ப
ராபரையை யொருஞான் றுமகத்துள் வைப்பாம்.()

திருமூலநாதர்.

பொன்பூத்த மணிமார்பன் வளியமழலுங் கண்ணா
கப் புவிதேரக், மின்பூத்த விருசுடரு முருவாக
வெளிவழியா விரைந்து கங்கை, கொன்பூத்த சடை
த்துளும்பப் பகைகடந்தேண் வடிவுமொரு சோல
மெய்யின், றென்பூத்த வுறுப்பாகத் திருமூல நா
தர்பதஞ் சேர்ந்து வாழ்வாம. (௩)

வேறு. குங்குமசவுந்தரி.

நகைமழ லடுத்தவர்க ணன்மையிது போலத
தங்குவாக ளென்றுழை தரித்தவரொ டொப்பப்
பைங்கிளியை யங்கைகொடு பண்ணுரை பயிற்றுங
குங்கும சவுந்தரிதன் கோலமினை வாமால். (௪)

வெள்ளைவாரணப்பிள்ளையார்.

அள்ளிலைய ஞாங்கர்மழு வாதிக ளிருந்து
மொள்ளுகிர்க ளாதியி னுருப்பகை கடந்த

வள்ளலென வேயொரு மருபபினிகல் வென்று
வெள்ளைமத வாரணமென் மெய்வினை முடிக்கும்.
முருககடவுள்.
உயர்ந்தவரு மலவ்வரு மோங்கியதன் னெக்காம்
பயந்தழுவி னெப்பரேனல் ப்ரரையறி விததாங்
கியைந்தழக வானமகளொ டேனல்வளர் மாதும்
புயந்தழுவ நின்றபுணி தற்கடிமை செய்வாம். (௬)
வேறு. திருநந்திதேவர்.
தத்தமக் கிறைவ ராயந்து தவஞ்செயு முறையுந்
தெனபா, லுத்தமன் முறையு முமைப ராதியோர்க்
குறுது நீங்க, வகததலப் பிரமபி னெச்சிக கண்
ணுதல் சேவை யார்க்கும், பத்தி னருளு நந்தி
பணிமலர்ப் பாதம் போற்றி. (௭)
வேறு. தண்டீசநாயனர்
அந்திமதி முடிக்கணிந்த வழகர்திரு வடிபிழைத்
தார் யாரே யாக, வெந்திறலி னவருயிரை வீட்டுவ
தே மேலான விமலா னநதந், தந்தருளு முத்தியெ
னத் தாரணியோ ரறிந்துய்யத் தந்தை தாள்கள்,சிந்
தவெறிந் தவர்மலர்த்தாள் சிந்தனைசெய் தவர்மல
முஞ் சிந்து மன்றே. (௮)
திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.
மடடுவிரி நறுந்துளப மாலாவ மயனலு மறை
யி னலும், சுட்டியறி யாதபெருஞ் சுகப்பொருளை

யொருவிரலாற் சுட்டிக் காட்டி, மொட்டிளமென் முலையுமையாள் கொடுப்பவருந் தியவமிழ்த முழு மாங்கே, கொட்டியது போற்கவிதை கொழித்தகவு ணியர்மணிதன் குலத்தாள் போற்றி. (௯)

திருநாவுக்கரசுநாயனார்.

சருங்கடலிற் றமையுழக்கப் பெருஞ்சிலையி னூர ப்பிணித்துக் கண்ணேறு டாமை, யொருங்குறுத்த வொனூர்குழாந் துயர்க்கடலி னொருங்கழுந்த வும் ழ்பைந் தேற, னொருங்கிதழ்ப்பொற் கொன்றையும் வெண் டும்பையும்பா சறுகுமுடி நிலவ வைத்தார், தருங்கருணைக் கடன்முழுகிக் கருங்கடலின் மிதந்த வரைச் சரணஞ் சார்வாம். (௧௦)

சுந்தரமூர்த்திநாயனார்.

நீடியதண் கயிலாயத் தாடியிற்ற னிமலவுரு நிழ ற்ற வரங்கே, கூடிவரும் பெருங்கிழமை குறித்து மறு பிறப்பிடத்துங் குழகன் முன்னின், றூடியபெ ண் டகைதுனிதீர்த் தூழிதருதோ ழமையருள வுவ ப்பாற் பெற்றுப், பாடியெனை யாண்டமுனைப் பாடி வளா நாடனையே பாடி வாழ்வாம். (௧௧)

திருவாதவூரடிகள்.

வடநிழலி னொருநால்வர்க் கருளுநிலை யிதுவென் றுவயக்கி யாங்கு, விடமிடற்றி லணிந்தபிரான் குரு

ந்தடியி லிருந்துணர்த்த விழைந்து கேட்டோர், தொடருநிலை யிதுவென்று தெரித்தது போற் கரைந்துருகிச் சொரிந்து கண்ணீர், படருண்மெய்ம் மொழிதொடுத்த மாணிக்க வாசகர்பொற் பாதம் போற்றி. (கஉ)

வேறு. நமச்சிவாயதேசிகர்.

ஐந்தொழி னடத்த வேதுதனை யுருக்கொண் டடுத்திடு மதனையே யுருக்கொண், டிந்திய வழியி னியுநகுரு தடங்கு மிருவினை யொப்பினர்க் கருளைத், தந்திட வுலவாக் கிழிசவு ணியர்தந் தலைவனுர்க் கருளிய துறைசை, வந்தரு ணமச்சி வாயதே சிசன்றன் மலரடி வணங்கினம் பெரிதே. (கங)

அவையடக்கம்.

பெருங்கடன் முகந்து முகிலினமுமிழ்ந்த பெருகுநீர் வாரியை யுலகி, னொருங்குதன் னகத்தி னிடுவது முளதோ வோங்கிய வேரியா திகளு, மொருங்குபைந் தருக்க ணிழன்றபூ வாளூர் விமலனூர் புகழ்பெரி தேனுஞ், சுருங்கெறுப் பனைபோ லியன்றவா றெம்மாற் சொலப்படுந் தொக்கபே ரவைமுன்.

கங்கையும் பனிகால் வெண்மதிக் கொழுந்துங் கடுக்கையு மென்றிவற் றோடு, பொங்கிய விடமுமுரகமுந் தழலும் புலால்கம ழுத்தலைமெய் தரித்தார்,

மங்கல மதுரச் செந்தொடைப் பாடன் மடுத்தரு
ள் செவிகளிற் சிறுமை, தங்கிய வெளியேன் பாடு
று மடுப்பார் சலமில்சங் கரனெனு மாண்பால். ( )

புராண வரலாறு.

வேறு.

திருத்த னல்கிய புராணமூ வாயிரனுட் சிறந்தரு
டருஞ்சைவத், துருத்தி ரப்பெயர் பூண்டசங் கிதை
யுரி லோங்குகேத் திரகண்டத், தருத்த மல்கநன்
குரைத்தகூ விளவனத் தான்றமான் மியஞ்சாலப்,
பெருத்த வையகத் தனைவருந் தெரிதரப் பெயர்த்து
ரைக் குவன்யா னே. (௧௬)

பாயிர முற்றிற்று.

---

## நைமிசச் சருக்கம்.

ஞால நல்கிய நான்முகக் கடவுள்பண் டொருநாட
சீல மல்கிய தேவர்கள் சூழ்ந்தன ரேத்த
வேல மல்லலந் தவிசிடை யிருந்துழி யவன்பால்
வால மில்லிய ர்ாதிமா தவர்பல ரடுத்தார். (௧)

வணங்கி நின்றனர் வழுத்தினர் மலரணைக் குரிசி,
லிணங்கு நின்சரண் சரணமென் றடுத்தன ரெளி
யே, மணங்கு செய்கலி யுகத்தினு மஞ்சுத லின்றிக்,

கணங்கொண் மாதவம் புரியிடங் காட்டுதி யென்
றூர். (௨)

அருந்த வத்தின ருரைத்தமை யம்புயன் கேளாப், பொருந்து ளத்திடைப் புராரியைப் போற்றின னெளிந்து, வருந்த லின்றியே நீயிர்மா தவமினி தாம்மத், திருந்தி ருந்தலுந் தெரிக்குதுந் தெரிமினெ ன்றியம்பி. (௩)

விழும மல்குதன் மனத்திடை விமலனை யருளோடு, பழுதில் சக்கர மொன்றுறப் படைத்தெதிர் நோக்கிக், குழுமி வந்தமாதவத்தினீர் குயிற்றுமித் திகிரி, தழுவி நின்றுழித் தவம்புரி தகவென விடுத்தான்.()

விடுத்த சக்கரம் விண்ணிமிர் நெடியவ னங்கைப், படுத்த சக்கர மெனவொளி பரப்பிவான் வழிபோய்த், தொடுத்த தேத்தடைத் துணர்ப்பசுஞ் சாகையஞ் சோலை, யடுத்து மேதகு மொருவன மணவிநின் றதுவே. (௫)

மருக்க மழ்ந்தபங் கேருகத் தவிசின்வா னவனே, யுருக்கு மன்பொடு பணிந்தன ருடன்விடை கொண்டார், பொருக்கெ னப்பெயர் நேமியின் புறந்தொடர்ந் ததுபோ, யிருக்கு மவ்வன மெய்தின ரெய்தருந் தவத்தோர். (௬)

கானிறைத்தவண் டாமரைக் கண்ணியான் கரைந்த, பானிறைத்தன மொழிப்படி பருதிதங் கியுவிந், தேனிறைத்தகான் றவஞ்செயச் சிறந்ததென் றெண்ணி, வானிறைத்தமா தவத்தினர் மனமகிழ் சிறந்தார். (எ)

அங்கண் வைகின ரருந்தவ மாற்றினர் வதிந்தார், சொங்குயிர்த்ததா மரையினன் குயிற்றிய நேமி, கங்கு மங்கட னைமிச மெனப்பெயர் தரித்த, தெங்க ணுள்ளபன் முனிவரு மீண்டிநோற் றிருந்தார். ()

வேறு.

காற்றெறி மும்மஞ்செவிக் கயமுனிக்குழாம
போற்றுவ குருளையிற் புதன்றை யானனந்
தோற்றுதி வள்ளுகிர் வேங்கை தொக்குழி
யேற்றினப் பசுநிரை யீன்று போதுவ. (கூ)

கீரிய பொதும்பினுட் செழுமி வாளரா
வாருவ் கோம்பியோ டடுத்து மாமயி
லேருற மகிழ்வன வெவையு மின்னணஞ்
சீருற வயின்வயிற் செறிந்து வாழ்வன. (கய)

பகைநகை நொதுமலும் பாற வோரியற்
றகையுற யாவையுந் தவிர்ந்த நைமிச
முகையவிழ் கடுக்கையா ரருளின் முன்னுறும்
வகையுறு முத்தியின் வயக்க மாண்டதே. (கக)

த் தாமரை மனத்துள்ளி, யோம மல்கிய நீடிய வே
ள்வியொன் றுளூற்றிகின் றனர்மாதோ. (௧௬)

யாக மன்னிய வாயிடை யிருடிய ரீட்டமோ டூ
த்திட்டான், மாகவைப்பினு மண்ணினும் பாதல
மருங்கினு முறைகின்றோர், போக முற்றிநன் முத்
தியை யடைதரப் புகரறுவழியாக, லைக னல்கிய
மூவறு புராணமு மினிதுணர்ந் துயர்சூதன். (௧௭)

புக்க சூதனை யிருந்தமா தவத்தினர் பொள்ளெ
ன வெதிர்கொண்டார், தக்க வாதன மெனப்படும்
பிரசியைத் தந்தன ருபசாரந், தொக்க வாய்மொழி
நிறைத்தன ரகங்களி துளும்பினர் வழிபட்டார், நக்
கன் மான்மியங் கேட்குமா தரவுட னவிறன்மே யி
னர்மன்னோ. (௧௮)

வேறு.

தீர்த்த மேன்மையுஞ் சிவதல மேன்மையுஞ் சிற
ந்த, மூர்த்தி மேன்மையும் வருண்முதி லைகளு மு
றையி, னார்த்த வேனைய வழிகளு டனைத்துமா கிய
தென், வார்த்த தாணின தானன வாரிச மேனுள்.()

சிறகர் வண்டென வனைத்தையுந் தேக்கினனு செ
ம்பூரந், தறவ வைகின மவற்றினுட் காவிரி நாட்டி
ற், புறவி னுக்குநல் லருள்புரிந் திருந்தபூ வாளூர.

ரிறைவன் மான்மியந் தொகுப்புற வியம்பினே யன்றே. (உ0)

அனைய மான்மிய மனைத்தையும் விரிவினாற் கேட்க, நினைவி னுடிய விழைவின நிரம்பிய செல்வங், கனைய வார்கட லுலகினிற் பெற்றவர் கலியா, னினையு மாந்தருக் கிவது தகுதியே யாமால். (உக)

ஆத லாலற மாதிகள் வளரும்பூ வானூர்க்
காதை கேள்வியின் வறியரேங் கருத்தினி தடங்க
வோத னீதியென் றுரைத்தன ருரைத்தமை கேட்ட
சூத மாதவ னகத்தொடு முகங்களி துளும்பி. (உஉ)

வேறு.

அருள்வளர் பூவா ளூரி னமலனைத் தியானஞ் செய்து, குருவெனும் வியாதன் பாத மலரினைக் கும்பிட் டேத்தி, மருள்வளர் வினைகால் சிக்கு மாதவத் தூக்கஞ் சான்ற, விருடியர் முகத்தி னோக்கி யமிழ்தென விதனைச் சொன்னான். (உங)

சித்தச நகரின் மேய திருமூல நாதர் பாத, மெத்தனை யுளீவை யானு மியப்பிடப் படுமோ வவ்வா றுத்தம சரிதந் தானு மொருவரா லுரைக்க வொண்ணா, தத்தகு பூவா ளூரி னமலனா லுரைக்கி னல்லால். (உச)

உரைத்திடற் கரிய தேனு முபகுவென் றிருடி கேட்பக், கிரைத்தெழு வாணி யாற்றுத் தீரத்துப் பொதியச் செம்மல், புரைத்தபக் கொய்து சொற்றூன் புகன்றதை யுபகு வென்போன், றரைத்தலை விளங்கச் சொற்றூன் சயிமினி வணங்கிக் கேட்ப. (உரு)

அன்னணம யாறு நுகட் கருள்வளர் தலத்தின் சீரு, மன்னிய தீர்த்தச் சீரும் வயங்கிய மூர்த்திதனபாற், றுன்னிய சிறப்பு நீத்தோர் தொக்கெழு பதின்ம ராங்கு, நன்னர்மெய்ஞ் ஞானம் வேட்டு நகையழல் வளர்த்த வாறும். (உசு)

வழுக்கறு முறையால் வேள்வி வளர்த்துழிப் பிரமனெய்தி, யொழுக்கமோ டிறைவர் பூசை யுஞற்றிய வாறு மந்த, விழுக்கறு முனிவர்க் குள்ள மிரங்கியெண் புயத்து நாதர், முழுக்கமெய்ஞ் ஞான வுண்மை முறையுளி தெரித்த வாறும். (உஎ)

அருந்தவன் றனக்கு நன்றி யாற்றுமச் சுவினித் தேவர்க், கிருந்தழல் வேள்விப் பாக மினிதுற விறுத்த காலைப், பொருந்துவ தன்றென் றோதிப் பெருக்கெனப் பெற்ற சாபங், திருந்திய பூசை யாற்றித் தேவர்கோ னொழிந்த வாறும். (உஅ)

சுந்தர னென்றோர் மன்னன் றெடுத்தொரு கலை யை வீழ்த்துச், செந்தவ னொருவ னிட்ட சாபத்தா ம் நீம்பூ வாளிக், கந்தர்ப்ப னுன காலைக் கண்ணுதற் கழிய வீணை, யந்தண னருளாற் பூசை யிரதியா தரி த்த வாறும். (உகூ)

மாரவே ளுருவம் பெற்று வந்தனை புரிந்த வாறு ந், சீராறு வுமையாள் சாபஞ் செய்யவா டுழிப்போ ந் தீசன், வீரிய நுகர்ந்து சென்று கங்கையின் விடு த்துச் சாபஞ், சாரவப் புறவரந் தன்மை தழலவ னொழித்த வாறும். (௩0)

மாதவ னொருவற் காக வடநாது சார் கயையின் மே ன்மை, தீதறு பூவா னூர்க்குச் செறியவு மாங்கோ ருந்தி, போதவு மருளி முக்கட் புண்ணியன் கருணை செய்யக், கோதறப் பிதிரர் வானங் குடிபுகுந் திரு ந்த வாறும். (௩க)

நந்தன வனத்திற் சென்று நங்கைபார்ப் பதிமுன் வாங்குஞ், சந்திர வதியோர் ஞான்று தண்மலர் கொய்யப் போந்து, வந்தெதிர் மணிசூ டற்கு மன நிறை யழிந்து தீமை, சிந்துமஞ் சுளற்குத் தேசு திகழ்மக ளான வாறும். (௩உ)

சந்திர வதியைக் கண்டு தளர்மணி சூடன் றானு ஞ், சந்திர சூட னென்னத் தகும்பழ மலையிற் றோ

மாறி, யந்தமில் பொருள்க ளீட்ட வடுத்தலன் பூவா ளூரி, லெந்தையை வழிபா டாற்றி மீண்டவ னேகு மாறும். (கூரு)

சார்ந்தனன் வழிபா டாற்றுஞ் சந்திர சூடன் ற ணுங், கூர்ந்தநல் வனப்பிற் சான்ற குழுதையுந் தம் மு ணுக்கித், தீர்ந்தவர் வருத்தங் கூரச் சிவபிரா னிரங்கி நன்மை, யார்ந்தமஞ் சுளன்பாற் சித்த ராய்மகட் பேசு மாறும். (கூசு)

சித்தராய் வந்து நின்றார் திருமூல நாத ராகத், தொத்தலர்ப் புன்னை நீழற் றோன்றினர் மறைத லோடு, மத்தமுற் றவர்போன் மாழ்கு மஞ்சுளன் குரவன் கூறப், பத்தியி னிலிங்க பூசை பண்ணினா னுய்ந்த வாறும். (கூரு)

கூவிள வனத்து நாதர் கொழித்திடுங் கருணைப் பேற்றான், மேவிரு வோர்க்கு மன்றல் விதியுளி முடிந்த வாறுந், தாவறு நுங்கட் கிங்கே சாற்றுதுங் கே ண்மி னென்ன, வேர்வற முறையே கூற வூக்கினன் சூத மேலோன். (கூசா)

நைமிசச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ருஉ.

---

## தலவிசேடச்சருக்கம்.

திருமகட்குந் திருமிக் களிப்பது
பொருமகட்கும் புயவலி நல்குவ
துருவ வாணிக்கு மொண்கலை யீவது
மருவி வாழும்பூ வாரூர் ளம்பதி. (௧)

பொன்ன சும்பிய பூம்புனற் பண்ணைவாயப்
பொன்னி னன்னறுண டாதுகும் பூக்குழா
மன்ன மன்னினி னாடுந் தடந்தொறு
மன்ன மன்னவ ருங்குடைந் தாடுவார் (௨)

கமக்கு வாசந் தருந்தரை யெங்கணு
மமைக்குங் கண்க ளிமைப்பறப் பூந்துச
சுமைக்கண் மாமலர் தூர்த்துப் பெருங்கவி
னமைகரு நந்த வனங்க ளனந்தமே. (௩)

குளிருங டூர்சுவை யுங்கொடுத் தூத்தமக்
களிசெய் தக்கதென் றேபுன லார்ந்தொளிர்
தளையு மாறுந் தடாகமும் யாவையுந்
துளிசெய் தேம்பொழில் சூழ்ந்தக லாதவே. (௪)

ஐயர் வைகிய வாடக மாளிகை
வெய்ய தாயினுஞ் சுட்டொன்று வித்தலாம்
செய்ய தீச்சிதை யாமை யகந்தழீஇ
வைய முய்ய மழைவளஞ் செய்யுமே. (௫)

மணியி ஞற்புரி மாளிகை தங்கள்பாற்
பிணிபி லாவிய லூக்கஞ் செறிதல
லணிகி லாவிய சாளரத் தால்வரும்
பிணியி லாவிளங் காலிஃப பேணுமே (௬)

ஏட்டு மொண்பொரு ளெத்தனை கோடியு
நாட்டி வைக்க னந்தலை நல்கலாற்
சேட்டு வான்முழு துந்திக ழாவண
நீட்டு வார்கொடி யாற்சவி னீட்டுமே. (௭)

கொடுகருந் தோறுங் குரூஉமணக் கேணியி
னெடுசகுந் தோறு மிரும்புனல் போதசூரங்
தடுக்குந் தென்னிதி யாளர் மனைதொறு
மடுக்குஞ் செல்வ மகளிர சானுமே. (௮)

திறங்கொ ளந்தண ரான்மகஞ் சீர்ப்பன
மறங்கொண் மன்னவ ரான்வய மாணுவ
பிறங்கு நாய்கரி ஞனிதி பெட்பன
வறங்கள் யாவும்பின் ஞேரின்மிக் காவன. (௯)

ஒழுக்கம் யாவையு மாங்கே யொழுக்குவ
விழுக்கம் யாவையு மாங்கே யிழுக்குவ
முழுக்க வின்பமு மாங்கே முழுப்பன
விழுப்ப மில்லவு மாங்கே விழுப்பன. (௰)

வேறு.

கன்னகன் மாட மேடை கதித்துவா னகடு தூர்ப்ப, விண்ணெழு பருதிச் செல்வன் மிடைந்தமற் றவற்றி னூடே, நண்ணுதும் பெருட்டே யன்றோ நகைமணி யொற்றை யாழி, பண்ணினன் றேர்க்குப் பூட்டும் பரியுமொன் றன்றி வையான். (கக)

நவமணித் திரளிற் செய்து நாகநா டனக்கு மாட, முவவுவெண் டிங்க டன்மெய் யுரிஞுறத் தவழு ந் தோற்றம், குவளையங் கண்ணி னல்லார் குளிர்முகத் திங்கட் கொப்ப, வவமலி கறையைத தேய்க்கு மாள்வினை போன்ற தம்மா. (கஉ)

வாரண நிரைக ளார்க்கு மறுகுசூழ் மாட வீதித், தோரண நிரையி னூர்ந்த சுடர்மணித் தரளங் கான்ற, சீரணி யொளிமீப் போர்த்த சேயொளி மணிப்பொன் மாட, மேரணி பூதி பூசு மெரிநிறத் திறை யே போன்ற. (கங)

மங்கல வினைக ளெங்கு மதுரவின் னியங்க ளெங்கும், பங்கய வதனச் செவ்வாய்ப் பரத்தையர் நடனமெங்கும், கொங்குயிர் முல்லை மாலைக் கொம்பனார் குழலை யெங்கும், பொங்கிய கலவி யின்பப் புணரியிற் றோய்வ தெங்கும். (கச)

வேதமந் திரங்க ளெங்கும் வினைசெய்மந் திரங்க ளெங்கு, மோதுசந் தனங்க ளெங்கு முரைத்தசந் தனங்க ளெங்குங், காதல்செய் பாட லெங்குங் கருங்கணம் பாட லெங்குஞ், சீதள வாசமெங்குந் தேவர்கள் வாச மெங்கும். (கரு)

இந்திர னிகந்த செல்வ மெனைத்தையு மளித்த வவ்வூ, ரந்தமில் வளத்தி னிற்ப ததிசயங் கொல்லோ வந்தச், சுந்தர நகர ஞான்ந் துகளறுத் தருளு மாற்றான், முந்திய நாம ஞான கேத்திர மென்ப முன்னோர். (கசு)

தருக்களு ளென்போ லெந்தத் தலத்தினுஞ் சிறந்த திந்தத், திருக்கிளர் தலமென் றுண்மை தெரிப்பது போல நல்ல, மருக்கிளர் வில்வ கானம் வளர்தலால் வினைக ளெல்லாங், கருக்குமத் தலந்தான் வில்வ கானன மாய தன்றே. (கஎ)

மாரனுக் குருவ மீந்த வாய்மையாற் பூவா ளூரி
மாரனை யிரதிக் கீந்து மங்கலஞ் சிறப்பச் செய்த
காரண மதனு லவ்வூர் கல்யாண புரமென் றுகுஞ்
சீரிய மன்றல் செய்த சிறப்பினு மப்பேர் பூணும். ()

வேறு.

இரயிந் திவனென் றொருமா முனிவன்
பரவக் கயையிற் பயனைப் பிதிரர்

விரவப் பெருமேன் மைவிளைத் தலினூர்
சாவூற் றகபா புலியா னதுவே. (ககூ)

ம் வ று.

திருவானைக் காவினுக்குச் சற்றீ சான திசையின்
யோ சனையொன் றின் முனிவர் போற்று, முருவார்
ந்த தவத்துறைக்கு வடபாற் கவ்வி யூதி*யொன்றி
ற் காவிரிக்குத் தரத்தி னென்று, மருவாரின் ரேளி
வளரும் பூவா ளூரை மாதவங்கள் பவநதோறுஞ் செ
ளர்த்தோர்க் கன்றிப், பெருகார்வத் தொடுமடைதல்
வணங்க லாதிப் பெருநலமெய் தாதுதவம் பேணார்க்
கெல்லாம். (உ0)

வே று.

பருதிதன் னுலகின் வாழ்வர்பனிமதி யுலகின் வா
ழ்வர், பொருவில்பொன் னுலகின் வாழ்வர் பூமக னு
லகின் வாழ்வர், திருமறு மார்பன் வைப்பிற் சிவனு
வர் சிவலோ கத்தின், மருவுவர் பூவா ளூரி னொரு
தினம் வதிக்கப் பெற்றோர். (உக)

கடல்வரு மமுதந் துய்த்துக் கடவுளர் கதியுள்
வேட்ட, மடவியர் பவளச் செவ்வாய் வருமமுந் தி
னிது மூாந்திப், படவர வணிந்தார் ஞான வமுதமு

* கவ்வியூதி-இரண்டுகுரோசம்.

ம் பருகி வாழ்வு, ருடலுறு பயனி தென்றுங் கூறு
வனை யூட்டு வோரே. (உஉ)

அந்தணர் பெரியோர் சற்றோ ரருட்பணி விடை
யி னுள்ளோர, ரிந்தநல வினைஞர்க காங்கோ ரில்லக
மியற்றி வைப்போர்க, குந்தொளி யமரர் தத்த மூல
கிணைக் கொடுகக நேர்வர், சந்திரன் முடியில் வேய
ந்தரா தமதுல களிப்ப நேர்வர். (உ௩)

இனைத்தனைத் தவந்தா னங்கள் செய்யினு மந்த
வைப்பிற், பனைத்தனைப பயனை நல்கும் பழுமர வித்
துப் போல, வெனைத்துள் பழிபா வங்க ளீண்டினு
மாங்குற் றோர்கருக், பனைத்துகு மழைவாய்ப் பட்
வுப்பெனக் கரைந்து போமே. (உச)

பலவெடுத் துரைப்ப தென்னே பழிகருங் கொடி
யு மேருக், குலவரை யடுப்பிற் செம்பொன் வண்
ணமாங் கொள்கை போல, கிலவரை யாவ ரேனு
நின்மலன் பூவா ளூரி, னலமுற விருந்து வாழி னை
வையறு முத்த ராவார். (உரு)

தலத்துறு மேன்மை யாது சாற்றினே னிற்க வி
ப்பா, னலத்துறு முனிவி ரும்பர் நாகர்யா வரும்வந்
தாடும், பலத்துறு தீர்த்த மேன்மை பகருதுங் கே

ண்மீ னென்னுப், புலத்துறு பொறியை மாற்றும்
புண்ணியச் சூதன் சொல்லும. (உகூ)

தலவிசேடச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - எஅ.

---

## தீர்த்தவிசேடச் சருக்கம்.

இரயிக் குலமா தவன்பத்திக் கிரங்கிக் கயையிற் பயனதிகந், தரவொப் பிகந்த பூவாளூர் தனக்குப் பெருமை நிருபித்த, வரவச் சடிலப் பெருமானு லநகா ளெழுந்து பற்குனியென், றாவுப் புனற்றண் ணதிக்கங்கை யொழுகும் புனித முலகுறவே. (க)

சுரந்து வளரும் பாவத்தைச் சொல்லும் பழகு வெனுங்கிளவி, நிரந்து நீயென் பதுபோக்க னிகழ்த்து மதனுற் பாவத்தைக், கரந்து போக வொழித்தருளிக் கமழ்ந்த நறும்பூந் திரைசொரிந்துப், பரந்த வந்த நதிக்குரைப்பர் பற்கு னீயென் ரெருநாமம். (உ)

தேவர் பிதிரர் முனிவர்கடன் றீராச் சிதட் ரேயெனினும், பாவ முழுதுஞ் செய்தொழுகும் பதிதரெனினு மிழிகுலத்தோரி, யாவ ரெனினு மதின் முழுகின் முழுகிக் கிடந்த விரும்பவமு, மோவில்

சமுசாரமுமென்னு முத்தி யிடையின் மெழுந்த கல்வார். (ரூ)

தென்பாற் கரையென் றிமையாருஞ் சிறப்ப வுரைக்கும் பூவாளூர், தன்பாற் றிகழும் பற்குனியாந் தடவுந் தியைத்தக் கிணைகங்கை, யென்பா ரறிந் தோரந்நதியை யெய்திப் படிந்தோர்க் கேயன்றி, யன்பாற் புறத்தே கொடுபோந்தங் காடு வார்க்கும் பயனுறுமே. (ச)

வெற்ற பதியின் விதியாற்றான் விளைத்த வினிய புண்ணியத்திற், பொற்ற தலத்தி னுதரவாற் புரிபுண் ணியமோர் பதின்மடங்கா, முற்ற தலஞ்செய் புண்ணியத்தி னும்ப ரிறைஞ்சும் புட்கரத்துப், பற்றி யிழைக்கும் புண்ணியந்தான் பகரி னூறு மடங்கதிகம். (ரு)

தடவா னிறைஞ்சும் புட்கரத்துத் தழைபுண் ணியத்திற் பிதிரர்விழை, வடபாற் கரைச்செய் புண்ணியந்தான் வகுக்கி னோரா யிரமடங்காம், வடபாற் கரைச்செய் புண்ணியத்தின் வளர்பூ வாளூ ரெனுந்தென்பா, லிடமர் கரைச்செய் புண்ணியந்தா னெண்ணிற் பதினா யிரமடங்காம். (சு)

பூவாளூரென் றுலகமெல்லாம் புகழுந் தலத்தி லன்றிபொடுசெய், தோவா தெழுந்த புண்ணியத்து க் குயர்வு மொப்பு மந்தலத்திற், றுவா தெழுந்த புண்ணியங்க டாமே யன்றுபிறதலத்து, மேவா நின்ற புண்ணியங்கண் மேவா வுயர்வு மொப்புமே.

அவ்வா றுயர்ந்த பூவாளூ ரகத்திற் புரியும் புண் ணியத்தி, னவ்வான் பதிப்பற் குனிநதியி னாற்றி யெழும்புண் ணியமதிக, மவ்வார் நதிச்செய் புண் ணியத்தி னவ்வூர் சிறப்ப வீற்றிருக்கு, மவ்வார் ச டையார் சன்னிதியி லாற்றி யிடும்புண் ணியமதி கம். (அ)

பொன்னு மணியுங் கொழித்தொழுகும் பூந்த ண் புனற்பற் குனியாற்றின், மன்னு மரபாற் படிந் தெழுந்து மலிந்த பிதிரர் தருப்பணஞ்செய், தன் ன நதியின் கரையிருக்கு மாலின் மூலந் தனிற்பிண் டந், தன்னை யிடுவோர் பிதிரர்கட னறணந்து சிவ லோ கத்தடைவார். (கூ)

கூறு மனைய புனனதியிற் குறித்துக் கடன்கள் செயப்பெற்ற, மாறு தவிர்ந்த பிதிருந்தாம் வருந் து நரக வேதனையும், வேறு விளைந்த பல்வினையும்

விழுந்து போக வெழுந்துபோய்ப், பேறு கதுவு
ம் வான்கதியிற் பெயராதின்பத் தழுந்துவார். (௰)

இயக்குங் காலம் பாத்திரமென் றிரண்டு மேனைத்
தலங்களினும், பயக்கும் புனற்றீர்த் தங்களினும்
பார்க்க வேண்டி றைற்போல, நயக்கும் பூவா ளூரிட
த்து நறும்பற் குனிமா தீர்த்தத்து, முயக்கந் தவிர்
ப்போ ரவையிரண்டு மோர்ந்து பாரார் வினைமுடி
ப்பார். (௧௧)

யாவ ரொருவ னேறபலென விசைந்தா னிழிந்
தோ னாயிடினு, மோவி லவனே பாத்திரமா முறு
ங்கா லங்க ளனைத்துமாம், பாவ மறுக்குந் தவந்தா
ளம் பண்ணைத் துணிந்தோ ரத்தலத்தி. னுவ வகங்
கைப் பொருள்கிடைத்த வன்றே புரிக்தாழாமே.()

அய்ன மிரண்டு மதிபருதி யரவு தொடரும் பொ
ழுதிரண்டும், பயிலு முவாவோ ரிரண்டும்விதி பாத
மாதப் பிறப்பினையு, முயர்வு புரியு மகாளயபக்க
முமற் றைய்வு முறுநாளி, னியலு மன்ன சிராத்த
மாங் கியற்றி னளவாய் பயனுறுமே. (௧௨)

அன்ன மளிப்ப வுதவாதேற் பிண்ட மேனு மாங்
கிடுக, சொன்ன விதுவுங் கூடாதேற் றோய மேனு

ந் திலத்தோடு, நன்னர் மனுவா விறைத்திடுக ந
வைநீ ரிந்தத் தருப்பணமு, மன்ன சிராத்தம் வட
கயையி னுற்றும் பயனைத் தருமாதோ. (கச)

அனைய நதிபற் குனிதீரத் தன்ன மளிப்போ ரெவ
ரேனு, நினைய வரிய வளஞ்சிறந்த நிமல னுலகத்
தெளிதெய்தி, நனைவிண் டலர்ந்த வுய்யான நண்ணி
யன்ன மொவ்வொன்றுக், கினைத லறவொவ் வொ
ருகற்ப மெதிரில் போகத் தழுந்துவார். (கரு)

இருள்கால் சிக்குஞ் சோதிமணி யீழ் நிழைமெ
ல் லியகலிங்கம், பொருளே னையவு மந்நதியிற் புனி
தர் தமக்குக் கொடுப்போர்கண், மருள்கா லறுக்கு
மறிவோடு மண்ணிற் பெருஞ்செல் வத்தினரா,யரு
ளா தரவாம் சிவபுரியி னமர்ந்தா னந்தக்கடலிற்படி
வார். (கசு)

மிருகம் பறவை பருநிஜனும்வாழ் மீனு திகளு மப்
புனல்வாய், மரமுங் கொடியு மவைபயந்த கனிகா
ய் நுகர்ந்து வளருயிருந், திருகு வினையின் வலிமு
ருக்கித் தேவ ராகு மெனிலாங்கே,யுருவப் புனறோ
ய் மானிடர்க ளுயர்வா ரென்ப ததிசயமோ. (கஎ)

பாவ மறுக்கு நறுந்தீர்த்தப் பரிசு பகர்ந்தா மினி
முனிவீர், நாவ மழுவு மிப்புவியி னவைமுற் றறுக்

கும் பூவாளூர், மேவி யினி து வீற்றிருக்கும் விமல மூர்த்தி மேன்மையின், நீவி ருணர்மி னுரைத்து மென விகழ்த்துஞ் சூத மாதவனே. (கஅ)

தீர்த்தவிசேடச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம - கூசு.

---

## மூர்த்திவிசேடச்சருக்கம்.

மணிகிடந் திரட்டும் வெரினெடும் புழைக்கை வார்ந்தநான் மருப்பலை செவியி, னணிநடை யயிராவதப்பெறும் பாக னருச்சனைக் கிரங்கிமுன் னிழந்த, கணிதமில் வளங்கூர் திருவளித் தலின்றும் கல்யாண புரத்தில்வீற் றிருக்குந், திணிதரு மெண்டோட் டலைவனா தம்மைத் திருமூல நாதரென் றுரைப்பார். (க)

வரிச்சிறைத் தும்பி மதுநுகர்ந் துளரும் வனசநாண் மலரணைக் கிழத்தி, விரித்தமெய் யன்பால் வந்தனை புரிந்து விழுப்பொருள் வழங்குதற் குரிமை, பரித்தமை யானுஞ் சிபல வில்வத் தடியினிற் பயின்றுத லானுந், தெரித்தவப் பெயராற் றிகழ்ந்தகல்யாண புரத்தமர் செல்வரைத் துதிப்பார். (உ)

செய்யதீக் கொழுந்தை நீட்டிய தென்னச் சிவந்துவார்ந் தொளிர்செழுஞ் சடிலத், தையர்மா தவ

ர்களாற்றிய வேள்விக் கருண்மிசைச் சிறந்துமெய்ஞ் ஞான, மெய்யென வருளுங் காரணமதனு லுயர்திரு மூலநா தருக்கு, வையக முழுது ஞானதா னேசரெனும்பெயர் வழங்கிட்ப் படுமால். (௩)

வேறு.

வில்வ வனத்தில் வதிந்தருளும் விறைவால் வில்வ வனநாதர், செல்வ மிகுந்த மங்கலத்தைச் சேர்ந்த விரதிக் குதவுதலாற், கல்வி மிகுந்தோர் கல்யாண நாத ரெனவுங் கரைந்திடுவார், பல்வந் தனைசெய் திமையாரும் பயிலும் பூவா ளூரரையே. (௪)

அன்ப ரொருவர் தமக்கிரங்கி யான்ற வதுவை முடிப்பதற்குத், துன்ப மகற்றுஞ் சித்தரெனத் தோன்றித் தூது நடத்தலினு, லின்ப மெலையுங் கொடுத்தருளு மினிய பூவா ளூரமர்ந்த, நன்பொன் னனையார் தமைச்சித்த நாதரென்று நவிற்றுவரால். ()

உரைத்த பெயரு ளொன்றேனு முரைப்போர் தமக்கு மப்பெயர்தான், புரைத்த பாவ மனைத்தினையும் புரட்டு மமரர்க் கெனவானி, னிரைத்த போக மனைத்தினையு நிறுத்தும் போகம் வெறுத்தவர்க்குத், திரைத்த நறுநீர் முடிவைத்தார் செய்ய பாத நிழல்சேர்க்கும். (௬)

மகக டமக்கப்பெயரிட்டு வழங்கு வாரு மண்ணுலகிற், ரெக்க பொருளின் வளத்தோடுஞ் சுற்றந் துவன்றப் பிணிபாவ, மொக்கவொழித்து வான்க தியி லுயர்ந்த பேர்க மிகநுகர்வார், மக்களவருமவ் வாறு வாழ்ந்து கதியை மருவுவார். (எ)

மறைகண் முழங்கும் பூவாளூர், வரதர் நாம மிட்டழைக்கும், பறவை பசுவா தியும்பண்டைப் பாவ முழுதுங் கழிஇவளங்க, ணிறையுந் துறக்கத் தரம்பையர்பா னீடு போக நுகர்ந்தப்பாற், பிறையும் புனலு முடிக்கணிந்த பெருமான் பணிசெய் தருள பெறுமால். (அ)

தக்க முனிவர் பூசித்த தகைசால் வில்வ வனத்தென்று, நக்க னுறையுந் திருக்கோயி னண்ணிப் பசும்புற் பசுவாதி, மிக்க பசிக்கு மேய்ந்திடினும் விழுமப் பணிசெய் தனவென்றே, பொக்க மகற்றி மேற்கதியிற் புகுவித் திடுமப் புண்ணியனே. (கூ)

வளங்கூர் வில்வ வனத்தமர்ந்த வரதர்க்கெனவே விடப்பட்ட, விளம்பூவைகள்பைங் கிளிபூக மிரலை தகரென் றிவையனைத்துங், களங்கூர் வினைகண் முழுதிரியக் கயிலை மலையிற் பெருங்கணமாய்த், துளங்கா வறிவிற் சிவபெருமான் சுடர்பொற் கோயி லிடைவதியும். (கo)

கடன்கொண் டேனுஞ் செய்யாத கருமம் பலவும் புரிந்தேனு, மடன்மிக் குடையோர் மனைமைந்தர் தம்மை வளர்க்கு மாறேபோ, லடல்வெள் விடையார்க் கெத்திறத்தும் பொருளார்த்துனரே மெய்யன்ப, ருடையோ ராயும் பொருளுதவார் பொய்யன் பினரே வழிபடினும் (கக)

மெய்யன் பினரே பொருளளித்து வேட்ட வேட்டாங் கருள்பெறுவர், பொய்யன் பினர்கள் பொருளளியார் புகழ்ந்தா ரேனும் பூவாளு, நைய னிடத்து மிகப்பயனை யடையா ரந்தோ வீதென்னை, யுய்ய லுறுவார் பொய்ப்பொருளை யுறுதிப் பொருளா வைப்பர்களோ. (கஉ)

வறியன் பசியைத் தணியாத மல்கும் பொருளான் கொடுமிரையத், துறுவ னெனிற்பல் பொருளை வையு முதவி வளர்க்கும் பூவாளு, நிறைவர் பலிபூசனையாதி யினிது சிறப்பி யாதீட்டி, நிறைவிக் கிடும்பாக்கியத்தார்போய் நிரைய முறுகைக்கையுறவோ.

செல்வ மிலரே லுழவாரஞ் செய்க கோயி லலகிடுக, நல்ல பசுவின் மயநீரா னுளுந் தெளிக்க சிறு தூறு,கல்வி யெறிக மலர்பறித்துக் காம ரலங்க லுருத்தணிக,வல்ல லகற்றிப் பெரும்போக மனைய வேண்டுங் கருத்தினரே. (கச)

உடலிற் பிணியாற் பணிபுரிதற் கூக்க மிலரேற் பனலாடிக், கடவுட் கோயில் வலம்வருக காலந் தோறுந் தரிசிக்க, விடமுண் டிருண்ட கண்டர்புகழ் விரிகக தியானஞ் செய்திடுக, வடர்வல் வினையைக் கெடுத்தின்ப வாழி படிய வேண்டுநரே. (௧௫)

கோயி லடுத்துத் தரிசிக்கக் கூடா வசத்த ராயி டினும், வாயி லடுத்துத் தரிசிக்க வாயி லடுக்க மாட்டாரும், பாய தமது கடைத்தலையிற் படர்ந்து சிகரந் தரிசிக்க; மாய வினையின் வலிமுருக்கி வாழ வேண்டுங் கருத்தினரே. (௧௬)

எழுந்து நடந்து கடைத்தலைமுன் னெய்தமாட்டா ராயிடினும், விழுந்து கிடந்த வாறுங்கே வில்வ வனத்தில் வீற்றிருக்கும், கொழுந்து மதிய மிலைத்தவர்தங் கோல நினைக்க பெயர்மொழிக, வழுந்து படும்பல் பவக்கடலி னகல் வேண்டு மதிவினரே.()

பிறவிப் பகைக்கும் பிணிப்பகைக்கும் பெயராப் பாவப் பெரும்பகைக்கு, மறமிக் குயிர்க்கும் படை வில்வ வனத்தி னினிது வீற்றிருக்கு, மறவர் மகிழுந் திருப்பணியே யாகு மவற்றுண் மிகவுயர்ந்த, விறைவருறையுந் திருக்கோயி லியல்பி னோக்கும் புண்ணியமே. (௧௮)

பொருண்மிக் குடைவோ ரிட்டிகையாற் புரைதீர் சிலையா லிழைத்திடுக, பொருண்மிக் குடைமை யில்லாதார் பொற்ப மரத்தான் மண்ணினும், நிரண மதனுஞ் செய்திடுக தேவ தேவ னிருவோர்க்கும், பொருவில் பயனைச் சமமாகப் பொருக்கென் றளிப்பன் வினையறவே. (௧௯)

வேறு.

வருந்திர ணத்தாம் கோயில் வகுத்தபுண் ணியத்திற் கோடி, திருந்துமண் ணதனுற் செய்யிற் செப்புமிப் பயத்தி ரட்டி, பொருந்தும்வன் மரத்தாற் செய்யிற் பொருத்துமிட் டிகைக்கு நாற்றி, தருந்த குசிலையாற் செய்யிற் சாருமெண் மடங்கு பேறு. ()

புதிதுறப் பணிகள் வேறு புரிவதிற் பழைய தொன்றை, விதியுளி புதுக்கு வோர்க்கு மிக்கபுண் ணியந்தா னெய்து, மதிமுடிக் கணிந்த வில்வ வனத்தினர் கோயில் பேணு, மதிபயன் சிவனே யாவ தல்லது பிறிதொன் றன்றே. (௨௧)

வேறு.

பொருளளவை தனக்கேற்ப வில்வவன நாதருக்குப் பொற்பார் கோயிற், றிருமலிய விழைத்தவர்கள் செறிந்தபல பாவவினைச் சிமிழ்ப்பி னீங்கி, மருவுவட கயிலையிற்போய்க் கணநாத ராயிருப்பர் வகு

த்தோர் சுற்றங், குருமலிபொன் னுலகிடையிந்தி ரர்பதிஞல் வர்களளவுங் கூடிவாழ்வார். (உஉ)

எம்முடைய திருமூல நாதீரமர் திருக்கோயி லி னிது செய்தோர், நம்முடைய பிதிரரெல்லாந் தண வாத பெருநிரையத் தடையி னீங்கி, விம்முபெருஞ் சுகக்கதியின் மேவுவீர்முழ் றவர்குலமே தினியிற் பானு, வொண்மதியென் றிவைவழக்க முள்ளளவு நசியாம லுவப்பின் வைகும். (உஙு)

யாவரொன்று பணிவிடையை யாலயத்தி லிழைக்கி ன்று னவனுக் கெந்தப், பாவவினை களுநசிக்கும் பா க்கியமெல் லாமவற்கே பல்கும் விண்ணிற், காவல னு மவனுணைக் கனுசுவன்மற் றவனினைத்த கரும மெல்லாங், பூவுலகி னெளிதாக முற்றுமவன் பெரு மையையார் புகல வல்லார். (உச)

வேறு.

நாத்திக னடுநிலை பிழைத்த நாவினன்
வேத்தவை கேட்கவெங் கோள்வி ரித்தவன்
பாத்திரத் திரும்பொருள் படுத்தி டாதவன்
மூத்தவர் தந்தைதாய் மொழியைக் கீழ்ந்தவ்ன். ()

பிறருறக் கொடுத்ததைப் பிடுங்கிக் கொண்டவன்
பிறர்பொருள் கவர்ந்தவன் பிழை செய்தவன்

பிரமனை விழைந்தவன் பிள்ளை விற்றவன்
பிறர்வளங் கண்டுளம் பொறாத பெற்றியன் (௨௬)

அண்டநா யகர்தமக் கமுதங் கூட்டிடா
துண்டவன் மறைகளோ தாது விட்டவன்
மண்டழல் வளர்த்திடான் மறையினோர்ந்தெனக்
கொண்டவெச சங்களைக் குயிற்றி டாதவன். (௨௭)

வீரனைக் கொன்றவன் விரதங் கொன்றவன்
போரிடை வஞ்சனை புரிந்து வென்றவ
னூரியர்க் கிரும்பழி நாட்டி யிட்டவ
னூரினைக் கெடுத்தவ னூன்விற் றுண்டவன். (௨௮)

செய்ந்நன்றி கொன்றவன் சினக ரத்திடை
மையநுண் ணிடையினா ராகந் தோய்ந்தவன்
பொய்யுரை கிளந்தவன் பூசு ரக்கொலை
மையலி னிழைத்தவன் மாதைக் கொன்றவன் ( )

தருநிரை தடிந்தவன றடாகந் தூர்த்தவ
னிருமுது குரவர்பா லிடுக்கண் செய்தவன்
கருவினை யழித்தவன் கன்னி யைப்புணர்ந்
தொருவினன் முதலுப பாதகத்தரும். (௩௦)

குரவனைக் கொன்றவன் குரத்தி கொங்கைதோள்
விரவுறப் புணர்ந்தவன் வெங்க ளுண்டவ

ணிரணியந் திருடினே ணிவரைக் கூடினோர்
பரவிவு ராதிமா பாத கத்தரும். (௩௧)

குழகனை நிந்தனை கூறி நின்றவன்
பழகுவே தாகமம் பழித்து நின்றவன்
விழவுபூ சனைவிம லாக்கு நீக்கிய
வழிதகை முதலதி பாத கத்தரும். (௩௨)

உய்ந்திடு நெறியெது வென்னி லூரிடை
யந்தண னிலைய மாக்கிப் போறறலே
மைந்துடை யாலயம் வகுக்கு மாள்வினை
நந்தின ருய்யவு நவிலக் கேண்மினோ. (௩௩)

உருத்திர கணிகைய ரோடை யானைமா
செருத்தலான் வயறிகழ் பாதி ராதியுட்
கருத்துறு விருப்பினுங் கையில் வாய்ந்தன
பொருத்திமிக் கிறைஞ்சிடிற் போமப் பாதகம் ()

கவற்றுவன் பாதகங் கழிக்கக் கூறிய
விவற்றினும் வல்லுறு ரெளிதி னுய்யவு
நவிற்றுதுங் கேண்மினோ நன்மை யெய்துவான்
றவற்றுல கிடும்பையிற் றணந்த வந்தணீர். (௩௫)

வேறு.

விளங்கு பஞ்சமி பூரணை பின்பக்க மேவிய பதி
னொன்கு, துளங்கு மட்டமி யாதிரை கும்பத்திற

றோன்றிய மகமாடி, வளங்கொளுந்தலை யுவாவொ
டு கூடிய மதித்தின மீனத்தி, னுளங்கொள் பூரணை
யமதி யிடைவரு மோங்குமுத்தரமென்று.(௩௬)

திங்கள் வாரத்திற் கூடிய தலையுவா செங்கதிர்
வாரத்திற், றங்கு சத்தமி யயனமுன்னுகமேற் சாற்
றிய வவையென்று, பங்கு முற்றறு மனைவகை நாளி
னும் பற்குனி நீராடிப், பொங்கு மாமறை யந்தண
ர்க கேன்றபல்பொருள்களுந் கொளவீசி. (௩௭)

ஆனநெய்பொழிந் தரவிந்த நாளநூலாக்கிய தி
ரியிட்டு, ஞான நாயகன் றிருமுன்னர் விளக்குறீஇ
நறும்புகை கமழ்வித்து, வான நாயகன் றிருமுடி
க் காவின்பான் மந்திரத் தினிதாட்டி, யீனம் நீங்கிய
சுகந்தமும் வில்வமு மெடுதமெடுத் தருச்சித்து. ()

மூன்றி ரட்டிய சுவையினு ளுண்டியு முதல்வனு
க் கினிதூட்டி, யான்ற வந்தண ரருட்சிவ பத்தர்க
ளார்வல ரிவர்க்கெல்லா, மேன்ற வாறுநா லுண்டியு
மளித்தளித் திறைஞ்சிவந் தனைசெயயின், மான்ற
பாதகச் சிமிழ்ப்பினின் றெழுந்துபோய் வரன்கதி
களிற்சேர்வார். (௩௮)

வேறு.

வீரமே வியபாவம் விளையாத வியல்பினர்கண்
மாரனுர்க் குருவளித்த வள்ளலார் திருமுடியி

னீரநீர் சிறிதாட்டி னேழுலகு நடுநடுங்கக்
கோரமாக யெழுங்கங்கைக் குலநதிதம் முடிக்கணிவா

அலகில்புகழ்ப் பூவாளூ ரமலனார் திருமுடியின், மலரணிவார் மதியணிவார், வலம்வந்து விழுந்தெழுக ர, தலமுகிழ்ப்பார் சுரர்சூழ்ந்து தாழ்ந்திருகை முடிக்கூப்பி, நலவரங்கள் வேட்டிரப்ப நாயகராய் வீற்றிருப்பார். (௪௧)

மல்லல்புனல் சூழ்வில்வ வனத்திலொரு மறையவருக், கில்லியற்றி நிலமாதி யீந்தவரைத் தாபிக்கும், பல்லமரர் தொழவிலிங்கப் பதிட்டைபுரி பயனெய்து, நல்லசிவ பத்தர்களை நாட்டினுமப் பயனெய்தும். (௪௨)

திருமூல நாதரமர் திருக்கோயி லலகிட்டுப், பெருகார்வத் தோடுமெழுகிப் பிறங்குசுதைக் கோலமிடின், மருவாரு மலர்ச்செல்வி வதிந்தவர்மா மனையெங்கு, மொருநாளு மொழியாமே யொண்பொருளா லலங்கரிக்கும். (௪௩)

திங்கள்விழா வருடவிழாத் திவசவிழா விவைபுரிந்து, வெங்கடுவா லலங்கரித்த மிடறுடைய வில்வவனத், தங்கணரை வழிபடுவோ ரகன்மனையி லொழியாமே, மங்கல்நல் வினைத்தொழில்கள் வைகலுமவை கலும்வளரும். (௪௪)

எம்பெருமான் வில்வவனத் திறையவன்மா தவ ரமரர், தம்பெருமான் றிருவிழாத் தனிவிரதந் தரிசித்தோர், கொம்பனையா ளொடுவிடைமேற் கொண்டுவரத் தரிசித்தோர், வெம்புமலங் கெடச்சிவன் முத்தர்களாய் வீற்றிருப்பார். (௪௫)

செல்வமலி வில்வவனச் சிவலிங்கத் தருட்பெருமை, சொல்வகையின் முற்றுவதோ தூயமுனி வீர் முனிவர், வல்வினைகள் கெடவேள்வி வளர்த்தபடி கேண்மினென, நல்வினைசெய் சூதமுனி நயந்தெடுத்து மொழியுமால். (௪௬)

மூர்த்திவிசேடச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௪௨.

---

## வேள்விச்சருக்கம்.

திருமலியு மணிமாடஞ் செறிந்துபல வளந்துவன்றித் தெய்வ நாட்டைப், பொருமிறைவர் தவத்தாமையிற் போந்துவினை முழுதிரியப் பூசித் தங்குப், பிருகுவங்கி ரசுவசிட்டன் கசியபனத் திரிகுச்சன் பெருமை சால, மருவுகவு தமனிவர்க ளெழுவருமா தவம்புரிந்து வசிக்கு நாளில் (௧)

மாதவரன் னவர்மைந்தர் பாற்கவரே யாங்கிரசர் வளர்வா சிட்டர், காதல்செய்கா சிபராத்தி ரேயர்க

வுச் சர்கள்கவுத மிய ரென்று, வோதுமிவ ரெழுட
தின்ம ருட்டங்கிருந்து தம்முன்றிது வுசாவினர்க, டீ
தில்புரம் வனநதிகேத் திரந்திசுழ்வி மானமைந்து
ஞ் சிறந்த தானம். (உ)

நெடுங்காலந் தமதறிவி னுய்ந்தாய்ந்துந் தெளியா
து னொரேலென் றேகிக், கொடுமைகால னுயிர்குடித்
த கூத்தயர்சே வடிக்குழைக்கா தழகர் தம்பாற், க
டுங்காத லன்புடைய தாதையர்தா ளிணைவணங்கிக்
கடாவி நின்றே, ரொடுங்காத கருணையினு லெழுவ
ருமற் றெழுபதின்மர்க் குணர்த்தி னுரால். (ஙு)

எத்தகைய புரங்களினும் பூவாளு ரெனும்புரமு
மிலங்கு காணி, னுத்தமமா கியவில்வ வனமுநதி க
ளின்மலர்க ளுந்தி யோடி, முத்தெறியும் பற்குனி
யுந் தலங்களிற்சீர் முதிர்ஞான தலமுந் தெய்வச்,
சித்திரமார் சிகரத்திற் கல்யாண சிகரமுமே சிறந்த
வாகும். (ச)

வேறு.

அனையபுரீ முதலான வைந்துறப்பு மிகச்சிறந்த,
தனைநிகரு மொருதானந் தக்கதிரு மங்கலமே, வ
ளைபுகழ்சே ரன்பிலென வகுத்தவிரு தலத்திடை
யே, சினையவிழ்மென் மலர்ச்சோலை செறிதரவீற்
றிருக்குமால். (ரு)

வேள்விச்சருக்கம்.

அத்தலத்திற் றிருமூல நாதரெனு மருடமபயனா னுத்தமத்தி னுத்தமமா யொளிர்சுயம்புச் சிவலிங்க, மெத்திசையி னுள்ளவர்க்கு மினிதருள வீற்றிருக்கு, மெத்தியவன் புடையீரும் வேட்டெனப்போய்ப பெறுகென்றார். (௬)

அகத்திடையே யெழுமகிழ்ச்சி முகத்துவழி யாலரத், தகத்தவத்து ளொழுக்கின்ற தாதையர்சொற் றமைகேளா, மிகத்துதித்துப் பணிந்தெழுந்து விளங்குமெழு பதின்மர்களு, முகத்தினுமின் னருள்கொழிக்கு முயர்ஞான தலமடுத்தார். (எ)

வேறு.

வார்ந்தபழ் குனியிற் றோய்ந்து மரபுளி கடன்கண் முற்றித், தேர்ந்தமெய் யன்பி னோடுந் திருமூல நாதர் முன்பு, நேர்ந்தபைங் காந்த மீர்க்கு நெட்டிருப் பூசி போலச், சார்ந்தனர் துதிக ளார்த்தித் தாழ்ந்துமற் றிதனைச் சூழ்ந்தார். (அ)

ஈங்குவந் தடுத்த லோடு மென்னென மொழிகேம் பார், நீங்கினார் போலச் சிந்தை நிறைந்த மம்மர்களி னீங்கி, யோங்கிய காத லாலே யுயர்ந்தவித் தலத்து நாமே, வீங்கிய போகம் வேட்டல் விதியுமன் றுயர்வு மன்றே. (௯)

காலவெல் லைகளி னீங்குங் கடவுளர் போக மெ
ல்லாஞ், சாலவன் பிறப்பின் மீட்டுஞ் சார்ந்துயிரா
தளர்வ தன்றிச், சீலமெய்ஞ் ஞானா னந்தந் திளைக்
குமந் நெறியோ காணு, மேலென முயன்றெல்
லோரு மேவுறு கதிக டம்மால். (௪0)

வித்தக யோக மாதி விளைத்திடு மழியா வின்ப,மு
த்தியு முகுந்த ஞாதி மொயாத்துவாழ் கதியு மன்றக்,
கைத்தெழு நமது வேட்கை கைகட வாம லின்
றே, யுத்தம மெய்ஞ்ஞா னத்தை யுறுநெறி முயற
ல் வேண்டும். (௪௧)

மேதகு ஞான முக்கண் விமலரா லுணர்வ தன்
றி, யோருயிர் வருக்கந் தன்னா லுணர்வதொன் றன்
றே யந்தச், சேதனப் பொருளா யுள்ளார் திருவுள
மகிழும் வண்ணங், தீதறு வேள்வி யொன்று செய்
துமென் றதனைச் செய்வார். (௪௨)

இட்டிகை கொணர்ந்து வேதி யாதிக ளியல்பி ற
க்கி, யட்டொளி மணியாற் பொன்னாற் பாத்திர ம
னைத்து மாக்கி, மட்டுமிழ் சோம மாதித் திரவிய வ
கைக ளெல்லாங், தட்டற வருவித் தன்னோர் தனி
த்தனி தொடங்கி னார்கள். (௪௩)

வேறு.

இருத்து விக்கனா மீண்டிய மாணரு மெல்லாம்,
கருத்து மிக்குறு காதலாற் றீக்கையைக் கலந்தார்,
திருத்தன் சன்னிதி தனிற்சிவ னார்தமக் குரிய, பெ
ருத்த * வேள்வியைப் பேணுத ரொடுங்கிமற் றவர்
தாம். (௧௪)

இட்டி யேபிர வர்க்கிய மக்கினிட் டோம, முட்டி
லாவிதை யாதியாஞ் சமத்தைகண் முயன்ற, சட்ட
காலமூன் றினுஞ்சவ னங்கண்மூன் றினையுங், கட்
நீக்குமோர் கற்பநூல் விதிப்படி கண்டார். (௧௫)

வேறு.

காசில் சாம வேதியாகள் கான மினிது தொடங்
கினா, ரேசி லோதிர் கணத்தினர்களியற்றி னார்கள
சமுசனையை, யாசி லத்து வரிகணத்த ராத்து வர
மபண ணார்நாட்டுங், தேசு மலியெண் கோணமு
றச் செய்த யூப மலங்கரித்தார். (௧௬)

நானா விததெய் வதப்பசுக்கள் பலவு நாணால் யா
த்திட்டா, ரானா மறையின் மந்திரத்தா லவற்றைப்
படுத்து வபையெடுத்துக், கானார் தழலா குதிசெய்
தார் கரைந்த வேளை யங்கத்தி, னானா குதியும் விதி
யானே யுஞற்றி னார்கள் வழுவாமே. (௧௭)

வேள்வி-சைவசகிரயாகம்.

வேள்விச் சபையி னுள்ளாரை விறந்த வேனை யந்தணரை, யாள்வித் தகனென் றேகுறித்திட் டாற்றப் பூசை யியற்றினர், கேள்வித் துறைமா தவர்தம்பாற் கிளந்த பாகமினிதேற்று, வாள்விட் டெறிக்கு மணிமவுலி வான நாடர் மகிழ்கூர்ந்தார்.(கஅ)

அமலன் வில்வ வனநாத னமரர்க் கமரன் றனைக் குறித்து, விமல வேள்வி மாதவர்செய் விளக்க முரைத்தா முனிவீர்காள், பமர முரலு மலர்க்கடவுள் படர்ந்த படியுங் கேண்மினென், வமிழ்தன் சுவையி னமிழ்தமென வுரைக்குஞ் சூத மாதவனே(ககூ)

வேள்விச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கசுஉ

---

## பிரமன்வரவுச்சருக்கம்

இன்னண மகந்தவ ரியற்றுழி, யுலோக
நன்னர்வள நோக்கநறு மாமலரின் மேலான
தன்னியல்பி னுற்றனது லோகமதி னீங்கி,
யன்னமிக வூர்ந்துவெளி யாற்றினியல் கின்றான். ()

வில்வளரு மாடமலி வில்வவன நேரே
யெல்வளரும் வானெறி யியங்கலுறு காலைக்

கல்வரை யெனக்கடவு மன்னமறை யாமே
நில்வினைய காயதுதன் னெஞ்சமுளை வெய்த. (உ)

முன்பினிரு பக்கமிரு நாற்றிசையு முட்டி
வன்புகுறை கின்றமட வன்னமதை நோக்கா
வென்படுவ தீதென விலங்குமுடி வேத
னன்பினொடு பாததன னகன்றபுவி தன்னை. (௩)

பார்த்தளவில் வில்வவன நாதரெதிர் பண்ணுந்
தீர்த்தர் விழை யாகுதிக டம்புகை முகத்தி
னார்த்தவவர் வாயினமறை யஞ்செவி நிறைத்த
தோத்திது சிறந்ததல மாகுமென வுன்னு. (௪)

வேறு.

அச்சமு மன்பூந் தோன்ற வதிசய மனத்த னாகி,
வெச்செனவோடு தண்ணென் றெழுந்தவேர் விள
ங்குமெய்ய, னுச்சியிற் குவித்த கைய னொலிமறை
துதிக்கு நாவ, னச்சிய வூர்தி விட்டு நண்ணினன்
பூவா னாரை. (௫)

பெருமறை வாதஞ் சில்லோர் பிரமவா தங்கள்
சில்லோர், கருமவா தங்கள் சில்லோர் காமுயு னார
னாஞ் சில்லோர், மருவிய கணிதஞ் சில்லோர் வழ
ங்கிய நீதி சில்லோர், பொருவில்கற் பங்கள் சில்
லோர் புராணவா தங்கள் சில்லோர். (௬)

சிலர்களா க்மத்தின் வாதஞ் சிலர்வியா கரண வாதஞ், சிலர்மிகு நிசண்டின் வாதஞ் சிலர்கள்காப் பியத்தின் வாதஞ், சிலர்களுஞ் டகத்தின் வாதஞ் சி லரலங் கார வாதஞ், சிலர்தனு வேத வாதஞ் சில ரனேக் கலையின் வாதம். (எ)

இவ்வகை வாத மெல்லா மிருடியர் செய்யா நிற்ப ச், செவ்விய தெய்வ வேள்வி சிறந்தெதிர் விளங்கி த் தோன்ற, வவ்விய மகன்ற சிந்தை யயன்மிக மகி ழ்ந்துவல்லே, கௌவையம் புனலிற் ரோய்ந்து கட ன்கழித் தடுப்பச் சென்றான். (அ)

இனிதுற வேள்வி யாற்று மிருடியர் முதலோ ரெ ல்லாங், கனியொடு கந்த மூலங் கையுறை யாக வே ந்திப், புனிதமென் மலரி னானைப் போந்தெதிர் க ண்டா ரன்று, னனையவர் தம்மைக் கையா லமைத் துயர் கோயில் புக்கான். (கூ)

மாதவர் மருங்கு சூழ மந்திரம் புகுந்த வேதன், றீதற வெதிரே தோன்றுந் திருமூல நாதர் செய்ய, பாதபங் கயத்தின் வீழ்ந்து பணிந்தெழுந் தாடிப் பாடிக், காதலின் வலம்வந் தென்னைக் காத்தியென் றிரந்து பின்னும். (க0)

இத்தலப் பெருமை சற்று மெண்ணுற வெளிய னேற்குப்; பத்திதந் தருள் வேண்டிப் படர்சிறை

யன்னாந் தன்னை, யுத்தம பெயரா வண்ண மும்பரிழ் மை யச் செய்தாய், பொறுத்துமென் பிழையை யீங் குப் பொறுத்தியென் றுரைத்து மீண்டான. (கக)

அந்தில்வந் தாற்றும் வேள்வி யந்தணர் முகத்தி னோக்கி, யிந்தவைப் பகத்தி றைத ரின்னருட் குரிய ரானீ, ரெந்தினி வேறப் பாற்போ யெய்திடுங் கரு மமென்று, மந்திர வேள்விச் சாலை மலர்முகத் தோடு புக்கான். (கஉ)

சாலையை யடுத்த லோடுந் தாபதர் தயங்குங் க ஞ்ச, மாலைய மாக்கி ஞானுக் காதன மருக்கி யங்க ண், மாலையி னுதவித் திகைகாயு வண்கனி யாதி நல் கி, வேலையி னமிழ்த மென்ன விழுத்துதி விளம்பி ச் சொல்வார். (கங)

அன்னமிக் குயர்த்தோ னீயிங் கடுத்தலா லமலர் தம்பா லென்னுமன் பில்லேஞ் செய்யு மெழின்மக முற்றிற் றேயா, மன்னிய வில்வ மூல வரதர்க்கு ம கிழ்ச்சி யேயாந், துன்னிய வவிகள் சாலச் சொரிந் துசெய் வேள்வி தன்னால். (கச)

நாங்களுமவில்வ மூல நாதனு ரருளால் வேள் வி, யோங்கிய பயனைச் சால வுற்றன மதுவு மன்றி, நீங்கரும் பிரபஞ் சத்தி னிகளமு மின்றே நீத்தாம்

பாகுறும் பரமா நந்தப் பரவையும் படிந்தா மென்றார். (கரு)

செஞ்சொலா லினைய கூறித் திசைமுக னோடு மங்க, ணெஞ்சிய் வேள்வி யாற்றி யினியமா புண்ணியங்கள், விஞ்சுற வளருஞ் சுதந் யேகனி றினைத்தினை மெய்யார், மஞ்சனுக் குரிய நெய்தோய் வபையழன் மடுத்திட் டாரால். (கசா)

வேறு.

சனகமுத லோரிறைஞ்சுந் தமனியநூ புரமலாத்தா, ளனகர்மகிழ்ந் துமையோடு மடன்மழவெள் ளிடைமேலா, வினமலியும் பூதகண மெம்மருங்குமிகநெருங்க, முனிவர்சோரி வபையவிதம் முகங்கமழ வெதிர்நின்றார். (கஎ)

சயசயவென் றேத்தெடுத்துத் தனிநெடுவா னிடைநெருங்கும், வயநெடுவே லமரர்சொரி மலர்மாரி நிலமறைப்ப, வியமுழுதும் பலவியம்ப வெதிர்நின்றார் தமைநோக்கி, யயனொடுமா தவர்பலரு மஞ்சலியோ டெழுந்திருந்தார். (கஅ)

ஆராத காதலினு லனைத்தெலும்பு நெக்குடைய வோரா டவுடன்முழுதும் விழித்துணைகள் பொழிகின்ற, நீர்கத் திடைகிமிர்ந்த நிறைநீற்றின் வண்

டவிடப், பாரார விழுந்தெழுந்து பன்முறைசூழ்ந் தேத்துவரால். (௧௯)

வேறு.

புள்ளா கியநான் முகனீண் முடியும் போரே னமதா கியமால் பதமுந், தள்ளா வலியு மனமுந் தலைமைச் சலமுந், தளரத் துருவிப் பணியு, நள்ளா ரமுதச் சுவையே சரண, நரரா யினுநன் மையினேத் துனர்பால், விள்ளா தவிளங் கொளியே சரண மெய்ஞ்ஞா னதலத் திறைவா சரணம். (௨௦)

தண்ணார் மதிவேய்ந் தபிரான் சரணந் தழலா டியசங் கரனே சரணம், பண்ணார் தருவீ ணைதரா சரணம் பனிமால் வரையின் மருகா சரணங், கண்ணார் தருவா ணுதலாய் சரணங் கடமா கரியீ ருரியாய் சரணம், விண்ணோ டர்விழுத் துணைவா சரண மெய்ஞ்ஞா னதலத் திறைவா சரணம். (௨௧)

சங்கக் குழையாய் சரணஞ் சரணஞ் சங்கத் தலைவா சரணஞ் சரணங், கங்கைச் சடையாய் சரணஞ் சரணங் கங்கைத் தலைவா சரணஞ் சரணம், பங்கத் துமைவாழ் பவனே சரணம் பங்கத் தெமைநீப பவனே சரணம், வெங்கட் பணியா பரனே சரண மெய்ஞ்ஞா னதலத் திறைவா சரணம். (௨௨)

மணமார் தருவில் வவனத் தொளிரு மணியே யினதரு ளூழமன் பினரே, துணிவார் சமுசா ரவலைத் திரளைத் துணியா வடியே மறின்பத் தியினுற், பிணியார் சமுசா ரநெடுந் திரைகள் பிறழும் பிறவிக் கடலைக் கடவாத், தினியா ரருள்வான் கரைசேரும் வகை செய்யிராய் சிவசங் கரவென் றனரால். (உ௬)

வேறு.

இருடிய ரெழுபதின் மருமிருண் மலவலி யினைநூறிப், பொருள்களி னுயரிய பொருளொரு மடிநிழல் புகுமாறே, யுருகினர் துதிசெய வவருள மறிதரு முமைபாகர், தெருட்டரு மருளினை யருளிய திகழ்திரு வுளமீரூர். (உ௭)

அடர்சிறை யனம்வெளி வழிநடை தடையுணவயன்மேவி, யிடர்கெட வழிபட விருடிய ரவரொடெஞ் சியவேள்வி, நடவலு மிறையவர் வரவிது வினியவர் நலஞான, முடையவ னிடைபெறு வுணர்மினென் றுரைசெயு முயர்சூதன். (உ௮)

பிரமன்வரவுச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧அ௬.

# ஞானவுபதேசச்சருக்கம்.

மாதவ ரெழுபதின் மருக்கும் வள்ளலார்
மேதகு ஞானமங் கருள வேட்டமை
பாதபங் கயப்பணி யலது யுற்றுறுக்
காதல்செய் நந்திதன் கருத்திற் றெள்ளினை (க)

புடையெலா மிடைதரும் பூத நாதரை
யடைதரு மமரரை யங்கண் வேறுற
மிடைதரு மெவரையும் விலக்கி ஞானரோ
வுடையவன் றிருவுளக் கருத்தை யுன்னியே. (உ)

ஓதிரு வினைச்சம முற்று நின்றிடு
மாதவ ரெழுபதின் மருக்கு நாதனார்
தீதற வருள்விழி சேர்த்திக் கைத்தலம்
பாதபங் கயமிவை பதித்திட் டார்சிரம்.

திருவருள் கொடுத்தபின் றிகப்பு
மருவிய சிவமென வந்த தன்னையு
மருளினல் லதையறி யாத வாவியு
மிருண்மல வியல்பையு மியம்பப் புக்கனர். (ச)

வேறு.

எண்ணி லாதன வண்டமற் றவையெலா மீண்ட, நண்ணு மாயையோ சடநவின் மலங்கண்மூன் றும், வண்ணம் வேறுற வவத்தையா தியின்வருந் தான்மாப், பண்ணு வானல னருளினாற் படைப்பவன் யானே. (ரு)

சிவனு ருத்திரன் சச்சிதா னந்தன்றே வேசன், ப
வன்ப ராபர னிற்குண னின்மலன் ப்ழையோ, ன
வைய றுப்பவ னெனமறை நவில்பவ னெவனோ,
வவனெ னத்தவ முனிவிர்கா ளமையறி மின்றே.

அண்டமோரணு வெனப்பெரி தாயணு வண்ட,
பிண்ட மேயெனச் சிறிதாய்ப் பெயர்தரா நிறை
வாய், விண்டி டாதமெய் யருளினா லலதுமே வா
தாய்க், கொண்ட தாமெம தியல்பையா வருங்குறி
த் தறியார். (எ)

நும்ம னோர்புரி தவப்பய* னெண்டெளி தருள
ச், செம்மை யாதியி னவையவத் திருவுரு வெடுத்
தா, மெம்மை யோர்தவ ரெமதிய லுருவமு மோ
ர்வுர், மம்ம ராளரிவ் வவையவ வடிவுமாய்ந் தறி
யார். (அ)

விமல யோகமும் போகமும் வீடுமெய்ந் நாலு
மமரா ராதியர்க் காற்றுமைந் தொழிலுமே னையவு
மெமது பாவனைக் கிருவுரு வில்லையே லிலவா
மெமது பாவனைத் திருவுரு வுண்டெனி லுளவாம்.

இருண்ட வாணவ மகன்றவா றறிவெம துருவாந்
தெருண்டு பார்மினோ செய்தவ முனிவரீர் மலமாய்

* நொண்டு - முகர்ந்து.

மருண்ட மாயையைக் கடந்தநா மாயையி னுருவம
வெருண்ட வாருயி ரெனவொரு காலத்து மேவாம்.

மாயை யாலியற் றிடப்படு முருவெலா நிலையா
மாயு மாலெம தருவமெஞ் ஞான்றுமா யாதால்
மாயி ருயிர் மாயையி னுருவெடுத் தெடுத்து
மாயு நீர்மைய ரவர்பதி யெனவர மாட்டார். (கக)

மாயன் மாமல ரயனிவர் மாதவப் பயத்தான்
மேயி னார்திதி சிருட்டியென் றிவைவிளம் பிவர்க்கு
தூய தாகிய திதியொடு சிருட்டியுந் துணைக்கு [ந்
நாய னாகிய நமையன்றி நணுனுவ திலையே. (கஉ)

அலகி லாதன வுயிரெனப் படுவன வவைதா
நிலவு மாணவத் தனபல நிறைந்தவா ணவத்தோ
டுலவி லாக்கரு மத்தன பல்வுரைத் தவற்றோ
டிலகு மாயைய பலவென மூவகைப் படுமால் (கரு)

அனாதி முத்தனா யருபப்வ னரனென்னு நாமே
யனாதி பந்தமா யிருப்பன வாருயி ரனைத்து
மனாதி முத்தனா கியவெம தருளினா லந்த
வனாதி பாந்தநீங் குமவனு பந்தமு மடுக்கும். (கச)

உயிர்கள் சார்ந்ததன் வண்ணமா யிருப்பதுண்
மையினாற், செயிரி னீக்கநாஞ் செறித்திடு மாயை
யே கரும, மயரி லாவவை யிரண்டையு மளவளாய்

மும்மை, மயருமார்ந்தவை யோக்கொடு வாவெலா மருவும். (கரு)

மறைக்கு மாணவத் தழுந்திய மாணுயிர் கலாதி, நிறைக்கு ஞானமாய்க் கருமங்க ணிகழ்த்தியா னெனதென், றுறக்க மேவிழிப் பிரண்டுட னுடல்தோறுவ்வே றெடுத்துத், துறக்கநாணில நரகமென் றிவைதொறுஞ் சுழலும். (கசா)

மூல வாணவத் தாருயிர் முயங்குநாள் காறு, மாலு மாயையுங் கருமமு மவமென மயக்கு, மேலு மாயைதான் சுத்தமே யசுத்தமென் றிரண்டாய்ச், சால வேதனு வாதிநான் சாகியுஞ் சாரும். (கள)

கருமமென்பதா காமியஞ் சஞ்சிதங் காழ்த்து, மருவி டும்பிரா ரத்தமூன் றுய்வரன் முறையே, பொருவி னல்வினை தீவினை புண்ணிய பாவ. மொருவி லின்பதுன் பங்களென் றுன்றிரண் டாகும.()

உருவத் தாற்கரு மம்பல விட்டியு முருவங்
கருமத் தாற்பல வீட்டியுங் கலங்குவ தன்றித்
திருவத் தாமெம தருளினைச் சேர்ந்துபே றின்ப
மருவத் தானறி யாதுமும் மலத்துழ முயிரே.(கக)

வேறு.

உழிதருமா ருயிர்க்கிரங்கி யஞ்சிருட் டியென்யாமே யுலகத் தெங்கும், கழிசிறப்பிற் றலந்தீர்த்த மூ

ர்த்தியென வுருக்கொண்டு கரிசு தீர்த்து, வழியரு ளுஞ் சிவதரும மபுத்தியினாற் புத்தியினன் மலிவி த்தப்பா, லெழுவிலிருஷரியையுமத லெட்டானு மும் மலமு மிறுத்து மன்றே. (உ0)

கேவலமே சகலமிவை கீழ்ப்படுத்துக் கிளர்ந்தெ ழுந்த வுண்மை ஞான, மேவுதலுஞ் சிலரென்பா லிரவிவிழி யெனவொன்றாய விரவு வார்க, டாவில ருள் வளர்சுத்த வைந்தவத்தை யினுமுறையே. சா ர்வர் சில்லோ, ரோவிலருந தவத்திரென் றுரைத்தி றைவர் திருமூல லிங்கத் தானுர். (உக)

ஆங்கடுத்த நான்முகனு மறைந்துதன துலகினி ற்போ யமர்ந்து வாழ்ந்தான், றீங்குதலை மழலைமொ ழித் தேவியொடுந் திருமூல நாதர் தோன்றி, யோ ங்கியமெய்ஞ் ஞானமுணர்த் தியமுனிவ ரனைத்தி னையு முணர்ந்து தெள்ளித், தேங்குபர மானந்தப பெருங்கடலி னொன்றாகித் திளைத்து வாழ்ந்தார். ()

அறங்கிளரு மவபிரதக விட்டமுடித் தலைதவழ்ப ற் குனிநீராடி, நிறங்கிளர்வெண் பட்டுடுத்தார் நிகரி ன்முனிவரர்நிகள புரியின் வாழும், மிறங்கொளி வேற் சுதவர்ம வேந்தனுமாங் கெய்தியவ பிருத நரா னந், திறங்கிளரச் செய்துமுனி வரர்மகிழ வந்தண ர்க்குச் செய்தான் றானம். (உரு)

அவபிருத நானமெந்தப் புனலிடைச்செய் யினு மந்த வுலகமற மறணணீர், சிவமலிவான் கங்கையி னும் பயன்றருமென் றுற்சிறந்த பூவா ளூரி, னுவ மையில்பற் குனிநதியி லவபிருத நானமுறச் செய் தோர்க் கெல்லாந்,தவமலியும் பயனினைத்தென் றெ டுத்துவரைந் தமரருக்குஞ் சாற்ற லாமோ. (உ௪)

வேட்டமனு வங்கியொடு தத்தமிருக் கையைய டைந்து விதியி னுற்று, வீட்டுமா ணியிற்கடைந்த வங்கியினை யுடன்கூட்டி யினிமை கூர, நாட்டமு று மாகுதிநித் தலுமோம்பித் திருமூல நாதர் பாத, மூட்டுமுளத் தினராகி முனிவரெல்லாம் பரவெளி யின் மூயங்கா நின்றார். (உ௫)

சிலநாளிங் ஙனமகல வுறங்கினவர் கைப்பொரு ள்போற் செயல்க ணீங்க, விலகாத பேரின்ப மேலீ ட்டின் செவ்வியது மேவ லோடுஞ், சுலவாத வறி வினர்க ளங்கியினை யுளத்தொடுக்கித் துரியா தீத, நிலையான சிவபோகத் தொன்றாகி யசைவற்று நெ டிது வாழ்ந்தார். (உ௬)

முனிவரெழு பதின்மருக்குந் திருமூல நாதரரு ண் முதிர்மெய்ஞ் ஞான,மினிதுதெரித் தருளியவா றிதுவாகு மினியறத்தி னியற்கை வல்லீர்,/பனிமல ர்க்கற் பகப்பொதும்பர் நிழலிருந்து விண்ணவர்தம்

பதியாள் வேந்தன், கனிவுளத்தி னருச்சனைசெய்
கதைகேண்மி னெனச்சூதன் கரைத லுற்றான். ()
ஞானவுபதேசச்சருக்கமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-உ௩௩.

## இந்திர னருச்சனைச் சருக்கம்.

அருந்தவப் பிருகுவி னூர்வப் புத்திரன்
திருந்திய மாதவச் சிவன னென்பவன்
பொருந்திம வரைப்புறம் பொதிந்த கானகத்
திருந்தருந் தவத்தினை யிழைத்திட் டானரோ. (க)

புண்ணிய வுடம்பெலாம் புற்று மூடிய
தொண்ணிறத் தளிர்மல ருதிர்சு வைக்கனி
யெண்ணில துவன்றிய விணர்த்த தாருவுந்
திண்ணிய கொடிகளுஞ் சிறைசெய் திட்டவே. (உ)

அன்னணஞ் சிவனரங் கமரு நாளையிற்
றன்னிக ரிலாதசை யாதி யென்றொரு
மன்னவ னருந்தவ வரதனிற் றோன்றிய
துன்னிய பேரெழிற் சுகன்னி யென்பவள். (௩)

பாங்கியர் பற்பலா யிரர்தற் சூழ்தர
வோங்கிய புறநக ருற்ற வவ்வனந்
தாங்கரு மகிழ்ச்சியிற் சார்ந்து தண்மணம்
வீங்கிய மலர்பல விரும்பிக் கொய்பவள். (ச)

முல்லையு மயிலையு முற்றுஞ் சூழ்தர
மல்லலம் புற்றது வயங்கக் கண்டன
ளொல்லையங் கடுத்திதி னுளதி யாதென
வில்லியின் வழியினு லினிது நோக்கினள். (௫)

நோக்கிய வில்லியி னேற்கு மாதவன்
றேக்கருள் விழியொளி திகழ்ந்து தோன்றலும்
பூக்குழற் சுகன்னிதான் பொன்வண் டீதெனத்
தாக்கையிற் றுரும்பினுற் சுலாவிச சூன்றனள். (௬)

விழியிணைக் கெண்டலு மேவும் யோகமங்
கழிதர யார்கொலென் றறவு ளேக்கினு
னெழின்மிகு மிரதிபு மிணைகொ லாவெனுங்
கழிவனப் பினளொருக் கண்ணுற் றனரோ. (௭)

சிறையழி புனலெனச் சிறந்த மாதவ
னிறையழி யுள்ளக னேரெலன் னீங்கதிர்ப்
பிறைநுதன் மடந்தைபாற் பெட்பச் சென்றது
மிறைவளர் மார்னும் விசிகந் தூண்டினுன்

றீதறு யோகத்திற் சிந்தை தீர்தர
வேதமங் கிழைத்ததை யாது மெண்ணலன்
மாதிடை யுளத்தினை மாட்டி னுனெனின்
மேதகு காமநோய் வெல்லற் பாலதோ.

வற்றிய வுடம்பினன் மறுத்த வண்டியன்
பற்றிய யோகினன் படிவ மாகவ

னுற்றனன் காமனோ வென்னினி லேர்வெவர்
முற்றிய காமத்தின் முழுகி டார்தவர். (கo)

வேறு.

மாரவேள் சரங்கள் பாய மையல்கொள் சிவன
னென்பர்ன, வீரவே லனைய வாட்கண் விளங்கிழை
யவன்முன் கைகவியா, வாராமா கியதன னெஞ்சும் பி
ன்னிட மலர்க்கை நீட்டிப், பாரவான் புற்று விண்
டு பார்விழப் பற்றி னானல். (கக)

துலங்கிய சுகன்னி யஞ்சித் தொடிக்கரம் விதிர்த்
துத் தள்ளி, யலங்கலுங் குழலுஞ் சோர வலறிவேர்
நுதலி னாட், விலங்கரை மணிக்காழ் சிந்த விணைச
சிலம் பிரங்கி யார்ப்பக், குலவுகெழு பாங்கி மார்தங்
குழுவிடை யோடி வீழ்ந்தாள். (கஉ)

நடுங்கிய வுடம்புங் காய்ந்த நாவும்வா ரிமைகள்
கூம்பி, யொடுங்கிய விழியு மோவா தோங்கிநீ ளுயி
ர்ப்பும் வீங்கிப், படுங்கவி னெஞ்சு நோக்கிப் பயங்
ந்தனி ளிவளா மென்று, கொடுங்குழைப் பாங்கி மா
ர்கள் கொம்மெனத் தெருட்டி னாரால். (கங)

மார்பிடை யெடுத்துப் புல்லி வருடிவேர் துகிலி
னொற்றிக், கார்பரந் தனைய கூந்தல் கையினு லொது
க்கி யிட்டுச், சோர்பனி முகத்து மென்கால் சுழல

வார் விசிறி யூக்க, வோர்பவ ளாகி மெல்ல வோட
ரித் தடங்கண் விண்டாள். (கச)

வேறு.

கையாறு சிறிதகலச் சுகன்னியய ருயிர்த்திருக்கு
ங் காலந் தன்னில், சையாதி யெனுமிறையு மனைவி
யர்நா லாயிரவர் தன்னைச் சூழ, வுய்யான மெனச
சிறந்த வோரகுமந்த வனத்தினூறு விநோத மாக,
மையாத பெருங்களிப்புத் தலைசிறப்பக் கொய்யுளை
மா நடவிச் சென்றான். (கரு)

கவனவாம் புரவியினின் றிழிந்துவனத் துள்ளூ
றப்போய்க் கலந்த காலைச், சிவனனீ டியபுற்றி னெ
திர்தோன்றத் திப்பியந்திப் பியமென் றோடி, யுவ
கையோ டடுத்திறைஞ்சி யெழுந்துமுனி வரனெ
ளிரு முருவ நோக்கி, யவ்லமார் விழிப்புனல்கண்
டார்செய்தா ரிவுற்கிதுவென் றருகே பார்த்தான்.

கோற்றொடிக்கைப் பாங்கியருந் தன்மகளு மொ
ருங்கிருந்த குழுவை நோக்கி, யாற்றரிய விடரிவற்
கிங் காற்றினவ ரிவரேயென் றகத்துக்கொண்டு, காற்
றினும்பல் விரைந்தடுத்துத் தனித்தனிகூய் முனிக்
கிடுக்கண் கண்டார் யாரே, சாற்றுகவென் றூன்றந்
ததபாங்கியர்யா னறியேன்யா னறியேனென்றார்.

எலலாரு முனிக்கிடுக்கண் புரியாமை யுரைத்து ரைத்தங் கேக வல்லே, வில்லாருங் கொடும்புருவ ச் சுகன்னியடி பணிந்தெழுந்து விளம்புகின்றாள், செல்லாரு நெடும்புற்றி னிலவிழி யெமுனிவன் செங்கண் டோன்ற, வெல்லாபொன் வண்டென்ன த் துரும்புகொடு சுலாவினே னெந்தா யெந்தாய.

அறியாமை யாலடியேன் விழியினவண் டெனக் கொண்ட வறத்தின் மிக்கான், செறிவார்வெள் வுளை முன்கை தன்கரத்தாற் பிடித்தனன்யான் றிகைத் துத் தள்ளி, வெறியார்ந்த மலர்க்கூந்தற் பாங்கியர் பால் வல்விரைந்து மீண்டு சோாந்தேன், நெறியா ரு மனுவேந்த நிகழ்ந்தபடி யிதுவென்று நிகழ்த் தித் தாழ்ந்தாள். (ருக)

அந்தோவென் செய்தனையென் ருயினுமா குகவி னிநீ யஞ்சே லென்னுக், கொந்தாரு மலர்க்கூந்தற் குமரியையங் கிரீஇமுனியைக் குறுகி யேத்தி, யெந் தாயென் மகள்பிழைத்த பிழைபொறுக்க வேண்டு மென விரந்தா னாகச, சிந்தாத கவலையெல்லாஞ் சிந்திமுனி வரனந்தனைச் செப்பினுனல். (உ0)

வே று.

மன்னர் மன்னநின் மாமகள் செய்பிழை தன்னை யான்பொறுக் கத்தவ வேண்டினக்

கன்னி யைக்கடி செய்தெனக் கீமதி
நின்னை யுஞ்சபப பேணிது நீக்கிடின். (உக)

என்று கூறலு மேந்திலை வேலவ
னன்று நாளுமுய்ந் தேனாவில் செய்தியை
யின்று சால முடிப்பலெந் தாயென
வொன்று மன்பி னுவந்திது செய்தனன். (உஉ)

முனிவ ருக்கு முடிகெழு வேந்தர்க்கும்
புனித யோகர்க்கும் பொற்ப முடங்கலுய்த்
தினிதின் யாரையு மீண்டுவித் தங்கிமுன்
பனிம லர்க்குழற் பாவையை நல்கினன். (உ௩)

செய்த வத்துச் சிவனனென் பான்மதன்
கைத வத்துக் கணைக்கதங் காற்றுவான்
பெய்தன் மன்னன புதல்வியை வேட்டவ
னுய்தல் கொண்டுடன் வாழ்ந்திருந் தானரோ. ()

வேறு.

இவ்வாறு சிவனனெனு மிருடிமனை வாழ்க்கைக்குச், செவ்வாய்மைத் துணையாகிச செய்பணியிற் றலைநின்று, துவ்வாத வமிழ்தனைய சுகன்னியொழு கிடுநாளி, லவ்வார்தண் பொழிற்கானத் தசுவினிதே வர்களடுத்தார். (உ௫)

ஆங்கொருசார் நின்றவண் கினைநோக்கியடும தனன், பூங்கணையா லலைப்புண்டு புரைபட்ட வுளத்

தினராய், மாங்குயிலி னிசைமருட்டு மழலைமொழி த் திதலைமுலை, வீங்குபணைத் தோண்மங்கை விழி யெதிர்கின ருரைசெய்வார். (உசு)

மாந்தளிரி னிறத்தணங்கே வரவருண னிநீதான் காந்தருவ மடமாதோ கவின்மிகுகின் னரமாதோ, வாய்ந்தவெழி லரமகளிர் வனபயின்மிகு வனப்பு டையை, யேந்திளமென் முலைக்கொடியே யிருநில கா தோவல்லை. (உஎ)

மணிமுறுவற் சுந்தரியே மத்தகாசினியோ,ரணி மிகுந்த வுன்னுடைய வருப்பிளமென் முலைநோக கிப், பிணியுழந்து தளர்ந்தனம்யாம் பிறங்குமசு வினிதேவர்,தணிவருநோ யமைத்தணைப்பத் தண் ணளிசெய் தருளென்றார். (உஅ)

உய்யாத பெருங்காமத் துரைக்கின்றார் முகம்பா ராள், பொய்யாத நெடுங்கற்பிற் புறவடிநோக்கின ள்புகல்வாள், சையாதி மகள்சிவனன் றன்மனைவி சுகன்னியென்பே, ரெய்யாது விழைந்தநுமக் கெ ளியேனல் லேனென்றாள். (உகூ)

வெறுத்தமொழி யான்மறுப்ப வெற்றவுடம் பின ராகி,மறுத்தபுதே வர்மொழிவார் வராரோக மடமாதே, யறுத்தவிள மையும்வனப்பு மழகியவெ

ம் பாலுளத்தைத், நிறுத்துவிழுத் திடினன்றே நின் பெண்மைக் குறுபயனும். (௩0)

நரையெழுந்து திரைவிழுந்து நனிமூத்த தாபதனு, லரையன்மகளாளவனக் கார்வமிரம் புவதர்மோ, வரைபுனைய மணிமுலையாய் வழாக்கற்பினிலைவழுவிப், புரைபடுமென் றுலதுவும் போகாமை புசலக்கேள். (௩க)

எடுத்தவுடம் கேயன்றி யின்னுயிர்க்கு முறையில்லை, யடுத்தொளிரித் தடத்திடையுன் னன்பனுடனிருவேமுந், தொடுத்தபெருங் காதலினுற் றேயந்தெழுந்தான் மூவருக்கு, மடுத்தவெழி லுருவொப்ப வயங்குமதா நெடுங்கண்ணாய். (௩உ)

அங்களுருமூன் றுள்ளு மெவ்வுருவி லுனக்காரவந், தங்குவதோ வவ்வுருவே தழீஇக்கொள்க வெனவுரைத்தார், திங்களுதற் சுகன்னியொன்றுஞ் செப்பாது மதித்தேகி, யங்கிகரி யாவரைந்த வன்பனுக்கெல் லாங்கிளந்தாள். (௩௩)

மாதவனும் மொழிகேளா வருத்தமிகு மிவ்வுடம்பி, னேதமுழந் திருக்கின்ற மிதுநீங்க விளமையொடு, மேதகைய வெழிலுருவ மேவுமெனின் றம்பாற், போதனைய விழிமடவாய் போந்தபடி காண்புமால். (௩௪)

ஒல்லைபோ யத்தேவர்க் குடன்படுதி யெனப்பொ
றுமை, வல்லமா தவத்தோன்றன் மனைவிதனை மு
ன்விடுத்து, மெல்லவே நடந்தாங்கு மேவுதற்கு
வழிக்கொண்டான், செல்லறீ ரம்மாதுஞ் சென்ற
வர்சொற் குடன்பட்டாள். (நரு)

அவத்துறையின் வழியடைததிட் டறத்துறையி
ன் வழியொழுகுந், தவத்துறைமுற் றியசிவனன்
சார்ந்தபெப வெதிர்நோக்கிப், பவத்துறையி னுயர்
தேவர் பண்பினொடு மளவளாய்ச், சிவத்துறையின்
வழியுய்க்குந் தீர்த்தமுடன் படிந்தனரால். (நசு)

பூவமர்ந்து மணிதுறும்பு பொன்வரித்து மிளிர
கரையின், மூவருமங் குடனேறி மொய்த்தபெரு
வனப்பினொடு, தாவரிய விளமைவலி தழைத்தோ
நகித் தேவர்கட்டம், பாவனைக்கும் பகுப்பரிதாம் படி
யொப்ப விளங்கினர். (நஎ)

தூயபெருங் கற்புடைய சுகன்னியவர் தமைநோ
க்கி, யாயவென தருங்கற்புக் கழிவின்றே லென்னு
டைய, நாயகனே யெனக்கின்ன நண்ணுகவென்
றுளத்தெண்ணிப், போயனைய சிவனனையே பூங்கர
த்தாற் றழுவினள். (நஅ)

திப்பியமா கியவிளமை திகழ்வனப்பி னுருவாய்
ந்த, வப்பெரிய சிவனனுமிக் சழகியமன் னவன்மக

ளுஞ், செப்பலைய மணிமூலையுந் திணிநெடுந்தோள் களுமெழுமுங்க, வொப்பரிய பேரின்ப முற்றார்போ லாயினர். (௬௯)

தலையாய வறிவினர்க டிரையவரே யாயிடினு, நிலை யாதும் பிழையாரே வினையாதும் பயன்பெறுவ, ருலைவாயின் விசும்பினர்க்கு முள்ளியீது முடியாது, கலைவாய்ந்த முனிகளிப்பக் கடவுளர்கள் சமழ்த் தனரே. (௭0)

நாணலைப்பத் தலைசாய்த்தார் நல்லவசு வினிதே வர், பேணுமவர் முகத்தெழுந்த பிழையினை யெதிர் நோக்கிப், பூணலைக்கு மூலமாதைப் புடைநீக்கிமாத வத்தோன், மாணுருவ மளித்திரை மறவேனென் றி துவிளம்பும். (௭௧)

வேறு.

தேவர் நோயறத் தீர்த்திடுந் தேவர்கா ணுமக்கு, மேவு வேள்வியிற் சோமபா னம்பெறு விதியைத், தாவில் வேள்வியொன் றியற்றியத் தக்கவேள் வி யில்யா, மோவி லாமலே யுறும்வகை நாட்டுதுங் கொண்மின். (௭௨)

என்று தேவர்கண் மகிழ்வுற மூகமனொ டியம்பி, வென்றி வேல்வல மேந்துமை யாதியை விளித்து, நன்று வேள்வியொன் றுனக்கிரும் பயனுற நடா

த்த, வின்று வேட்டன மென்றன னவனெலா மிறு
த்தான்.                                                    (சஙு)

அரிய மாதவ முனிவர ரளவிலர் தொக்கார்,
ரிய மாதவச் சிவனனென் றுரைத்திடும் பெரியோ
ன், விரியு மாமறை விளம்பிய விதிப்படி, யீசற், கு
ய வேள்வியொன் றுவப்பினோ டுஞற்றன்மே யினை
னுல்.                                                    (சச)

இருவ ராகிய வசுவினி தேவரென் பவர்க்கும்
பொருவில் பாகத்தை நியமித்தான் பூசுரர் பெருமா
மருவு காதலி னியமித்த மரபினைக் கேட்ட      [ன்
னருவி பாய்மத முகத்தயி ராவதப் பாகன். (சரு)

ஒளிறு வச்சிர மங்கையி லொய்யென வெடுத்துக்
களிறி வர்ந்துபொன் னுலகினைக் கழித்துமா னில
மேல்,வெளிறில் கேள்வியோன் வளர்த்திடும் வேள்
வியின் சாலைக், குளிறு வார்முர சொலியெழக் குழு
வொடு மடுத்தான்.                                        (சசு)

விமல நான்மறை முற்றிய சிவனனை நோக்கி
மரர் நாயக னங்கிகால் விழியொடு மறைவா
விமல நாயக னுவப்புற நிகரிலா வேள்வி
விமல மாகநீ புரிவதை விலக்கிலேன் கண்டாய். ()

அண்ட வாணர்தம் மணிதொறு நித்தலு மலைந்
து, கொண்டெடும் மேவலின் வயித்தியங் குறித்திடு

மமரர்க் குண்ட லாமவி யுதவலொட் டேனெனத்
தடுத்து, விண்டி டாதமா தவர்தமை நோக்கினன்
விளம்பும். (சஅ)

ஆற்று வேள்வியி னந்தணீ ரசுவினி தேவர்,சாற்
று வானவர் தம்வழி யொழுகுமவ் விழிவை,யேற்
ற தேயலா விருகிலத் தினுஞ்சரித் தீங்குத், தோற்
று மானிடர்கபோ லப்புறந் துரிசினர் கண்டீர்.(சகூ)

நீயி ரன்னவர் தம்க்கவி நியமித்துக் கொடுத்த,லா
யி னீர்நமக் கடாதுல கனைத்தினு மிறைமை,மேயி
னேற்கலால் வேள்வியில் விதிப்படி பாக, மீய லே
விலக் குதலென வியம்பதி காரம். (ருo)

அவித்த வைம்பொறி யமவர்கா ளன்றொரு கால
ங், குவித்து வைத்தன் சொடிந்துயர் கரந்துழந் த
னம்யாங், கவைத்தெ ழுந்தொளி ரொழுமணி நாவு,
டைக் கனலோன், சுவைத்த நன்மொழி துருவி
யெம் பாலெடுத் துரைததான. (ருக)

ஆத லாலவ னுதவிசெய் தமைக்கருள் கூர்ந்திட்,
டோது வேள்வியி னமக்கரு கேயிருந் துண்ணக்,
காத லாலவிப் பாகநாங் கற்பித்துக் கொடுத்தாந்,
தீதி லாதவச் செய்தியுங் கேண்மினென் றுரைப்
பான். (ருஉ)

வேறு.

விருத்திர னுயிர்க்கிறுதி மேவுதல் புரிந்து
வருத்தமிகு வன்பழி மரீஇயொரு மடுக்கட்
டிருத்தகைய தாமரையின் செவ்விமலர் நாளத்
துருத்தகவொளித்திட ருழந்தன் மிருந்தாம். (௫௩)

நாயக னிழந்தவிள நங்கையரை யொத்து
மாயுமறி வாளரை யடாக்கழக மொத்து
மேயபனி மாமலர் விளிந்தகய மொத்து
மாயிரு விசும்புலக மாய்ந்தது வனப்பு. (௫௪)

ஆயந்தமரர் கூடியகல் வானுலகம் வார்தோ
ளேந்துமொரு வேந்தனெ டிராமையெழி லென்றும்
வாய்ந்திடுவ தின்றுமுனம் வைகியர சாண்ட
வேந்தனிலை வேறரையன் வேண்டுமென நாடி. ()

வாம்புரவி வேள்விபல வாய்மையொடு செய்தான்
றேமபயிலு மைந்தரு செறிந்தவுல கெல்லா
மோம்பியர சாளுரிமை யுற்றுள னிவற்கே
யாம்பரிச தென்றுநகு டற்கர சுறுத்தார் (௫௬)

அன்னவ னிருந்துவிசும் பாண்டுவரு நாளிற்
றன்னிகரி லாதசசி மாதுதனை வேட்டப் [ணி
பொன்னிழை சுமந்தொளிர் புலோமசையை நண்
ணின்னலம் விழைந்தன னெடுங்கணாரு ளென்றுன்

வேறு.

பொருவறு வனப்புச் சான்ற புலோமசை கேட்டு மன்னன், கருதிய திதுவா லென்று கருத்திடைக் குய்யம் வைத்துப், பருவர லொழியின் சொல்லாற் பசருவா ளரச ரேறே, யிருவிசும் பாள்கின், றூர்யா ரவரெனக் கிறைவர் கண்டாய். (ருஅ)

ஆயினு மரசு வாவென் றறையயி ராவ தத்து,மாயிருந் தவங்கள் சான்ற மாதவ ரெழுவர் காவப்,பாயிருள் பருகுஞ் சோதிப் பன்மணிச் சிவிகை மீதுஞ், சேயிலே வேலோ யென்பாற் சேருதன் முறைமை யாகும். (ருசு)

அல்லதூஉம் விரத மொன்றை யகத்துற நாடிக் கொண்டேன், வல்லவா றதனை யாற்றி வரையறை வைக லெல்லாஞ், செல்லவே வேண்டு மென்று சில பக லிடைநீட் டிப்ப, நல்லவே மெல்ல வோதி நகுடனைப் போக்கிப் பின்னர். (சு0)

குரவனை யடுத்துத் தாழ்ந்து கும்பிட்டுச் செய்தி யெல்லாம், விரிவுற வுரைத்து நின்றாள் வியாழமங் கதனைக் கேட்டு, வெருவரேன் முனிவர் சாப விளை விஞ னகுடன் வீழ, மரவக லல்கு லாயென் றகற் றியா ரழலைச் கூவி. (சுக)

இந்திர னிருக்கும் தேய மிலைப்புரை கிளைத்துக் கொண்டு, வந்திடு கென்றங் ககவ வயங்கிழ் லமர ரொடு, நந்தமை யரிதிற் கண்டு நகுடனங் கூக்கு மா று, மந்தணர் பெருமான் சொன்ன வார்வமு மனைத் தும் விண்டான். (கூ௨)

அம்மொழி கேட்டுத் துன்பத் தாழ்ந்தநா முவகை வெள்ளம், விம்முற வெளிக்கொள் காலை வேந்தனு நகுட னையர், தம்மடி வணங்கிப் போற்றித் தன்குறை யுரைப்பத் தென்சொற், செழுமன்முன் ஞன வையர் சிவிகையைக் காவிச் சென்றார். (கூ௩)

புற்புதப் போகம் வேட்டுப் புங்கவர் தம்மை யேவு, மற்பவுள் ளத்தா னன்னோர் செயலினை யருளென் றெண்ணான், சற்பவென் றிருகாற் சொன்னான் மழுவெழ விழித்துச் சாபம், வெற்பொடு கடலை வென்றான் விளைத்தன னகுடன் வீழ்ந்தான். (கூ௪)

குறுமுனி வெகுளித் தீயாற் கொற்றவே னகுடன் வீழ்ந்து, மறுகிய செய்தி கண்டோர் வழியிடை யுரைப்பக் கேட்டு, ஈறுவிரைக் கற்ப நாட்டை நண்ணினஞ் செங்கோ லோச்சி, யுறுமமு றனக்கும் பாக முதவினை மாத லாலே. (கூரு)

அவ்விய கவ்வி யங்க ளனைத்திற்கு முதல்வன் யாமே, செவ்விய முனிவர் காணந் திருக்கவர் நகுட

ணையர், வெவ்விய் வெகுளித் தீயால் வீழ்ந்தன னெ
மக்கு மீளு, யிவ்விடைப் பாக மீயி னிடருழப் பீர்
க ளென்றான். (கூகூ)

வேறு.

தருக்கி ளுலிது சாற்றலு மிந்திரன்
வெருக்கொள் சிந்தையரோயினர் மெய்த்தவர்
பொருக்கெ னச்சிவ னப்பெயர் பூண்டவத்
திருக்கொள் சிந்தையி னுளிது செப்புமால். (கூஎ)

புகழ்செ யந்தணர் பொங்கிய வெப்பினு
னகுடன் வீழ்ந்தன னென்று நவிற்றினை,
புகரி லிம்மொழி பொள்ளென விங்ஙனே
யிகவ தாக வியம்பினை புத்திநை. (கூஅ)

எங்க ளுக்கதி காரங்களில்லெனப்
பொங்கிப் பொங்கிப் புகன்றனை வேதியர்
துங்க வாக்கிற் றுயர்நகு டற்குநீ
தங்கு நற்றுணை யாவது சத்தியம். (கூகூ)

இரவி தன்கிர ணத்தெரிக் குற்றநல
விரிசு வாலையி னுல்விளிக் கும்மா
சுரிய தண்டத் துலைக்குநல் லந்தணர்
சரத வாக்கிற் றகிப்பர்கள் காண்டியால். (எ0)

காள கூடங் கலந்த வுயிர்கொ லும்
வாளு மோர்ந்த வெருத்தன் வலிதெறு

மாளு டூமறை யந்தணர் கோபத்தீ
மூளின் யாவு மொருங்கு முடிக்குமே. (எக)

தரும மூலத்த தாகித் தழைக்குமாற்
பெருமை வையகம் பேணுமத் தன்மமும்
பொருவில் வேதம புகன்றது வேதமு
மிருமை யந்தணர் தம்வயத் தென்பவே. (எ௨)

அனைய தன்மைய ராதலின் வச்சிரா
வினையின் விண்டு விளங்கிய வந்தணர்
நினையு நெஞ்சினு நித்தலு மியாவரும்
புனையு நன்மைகொள பொற்புறு தேவரே. (எ௩)

தேவர் காவல செல்வச் செருக்கினன்
மேவு மாறு மதித்து விளம்பிலை
யாவ தென்னைநின் னுற்றலி னூழிவட்
பாவி நீபின் படுவது காண்டியால். (எச)

ஆற்று நன்றி யசுவினி தேவர்க்குச்
சாற்றி னுந்தழல் வேள்வியிற் பாகநீ
ரேற்று வைகுதி ரென்றிதை யார்கொலோ
மாற்ற வல்லர் வழங்குத றிண்ணமே. (எரு)

காம மிர்தி கடந்தவ னின்னணந்
சேமீ வான்மொழி செப்பி யிருவர்க்குஞ்
சோம பானந் துலங்க நிறீஇயின
னீம நேர்முகத் திந்திரன் காணவே. (எசு)

வேறு.

பாழ்நிற்றவ வல்ல வன்பகர் பாசமன்ற நிறுத்தலு, மூழி யங்கி யெனக்கி ளர்ந்துரு மேறு யர்த்த வன் வேள்வியைப், பூழி செய்திவ ணுவி யுண்டுபின் போவ தன்றி விடேனெனச், சூழி வெண்களி றுந்தி வச்சிரஞ் சுற்றி யோச்சின னார்த்தரோ. (எஎ)

கண்டு மாதவ ரஞ்சி யாசி கரைந்த னர்சிவ னற்கநூன், மண்டு வேள்வியின் முன்னி ருந்திடு மாற்றலர்க்கரு மேறனுன், மிண்டி மேல்விழும் வச்சிரத்தினை வெய்து நோக்கின னப்படை, அண்ட நின்றது கம்பி னார்விழிக் கஞ்சு காமுகர் நெஞ்சென. ()

புவனம் யாவு நடுங்கும் வென்றி புணர்ந்த வச்சிரம் வீண்படக், கவள மால்களி றூர்ந்து டன்றவிண் காவன் மன்னவ னேக்கியுள், ளுவகை யாண்மைநல் வீர மர்தி யொருங்க விந்தற நாணினன், சிவன னைவன் றீவி ழித்தவன் றீமை நோக்கியுரைப்பனல். (எகூ)

மாசுர் சூழ்தர விண்ணின் மேவிறை மாட்சி பூண்டமர் வண்மையும், போக மார நுகர்ந்தி டப்புணர் செல்வ மும்புகல் பேதைநீ, யேக வர்க்ணையி னீசர் பாத மிறைஞ்சு வேற்கிகல் செய்தனே, வேக

மாக வஂற்றின் விண்டிடுமென்று சாபம் விளைத்தனன். (அ0)

வேறு.

திருவும் வலியு மொருங்கிழந்து, திவள்பே ரணியும் பொன்னுடையு, முருவி னொளியு மிகக்கருகியுளைந்தா னிவ்வா றுலகனைத்துங், குருவெண் குடையி னிழல்பரப்புங் கோமா னிழியு மெனிலேனோர், பொருளும் வலியு மழியாத பெற்றி யுளவோ புகலுங்கால். (அக)

அந்தோ கொடுப்ப தழுக்கறுப்பா னனைத்து மொழிய விலம்பாட்டாம், சிந்தா குலமுற் றழிகின்ற செய்தி சிலநாள் கழிந்தனரே, கொந்தா ரழன்முன் னாசுவினிக்குக் கொடுப்ப தழுக்கற் றிந்திரனார், நந்தா வலியும் பெருந்திருவு மன்றே நழுவ நவிந்தமையால். (அஉ)

வீடாச் சாபத் தொடக்குண்ட விண்ணோர்க் கரையன் விரைந்தேகி, வாடாச் சீர்த்திக் குரவனிரு மலர்த்தாள் வணங்கி யெறும்வலியு, நாடாப் போகப் பெருந்திருவு நழுவ வுருவும் வேறாகிக், கூடார்க் காண்மை பெருக்கினேன் குழையா தென்னைக் காவென்றான். (அங)

விளைந்த சாபத் தொடக்கினையும் வேந்த னுரைத்த மொழியினையு, மளந்து குரவன் மொழிகுவா

னமரர்க் கரசே சாபத்தர, லுளைந்து பெரிதுந் தள ராதி யுளூற்று கருமப் பயன்வந்து, வளைந்து விடி ன்மற் றதுநுகர்ந்தே மாற்றல் வேண்டும் வைய கத்தே. (அச)

மூண்ட வினைய பெருந்துயர்க்கு முன்பே வினைநீ முடித்திட்டாய், வேண்டியெவர்க ளெக்கரும்ம் வி ளைத்தா ரவர்க்கே யதுபயனு, யீண்டு மதன்பின் னிரங்குதலா லென்வந் ததவு முன்புரிந்த, மாண் ட வினையு மிதுதீரும் வழியுங் கேளென் றுரைசெ ய்வான். (அரு)

வேறு.

இதங்க ளேபுரிந் தின்புறு கின்றவன்
மதங்க ளேபுரி வான்பொறி வென்றயன்
கதங்க ளாதி கடந்த கருத்தின
னுதங்க னென்றொரு மாமுனி யுத்தமன். (அசா)

பரந்த நீழற் பனச வனங்குலாய்
வரந்த ழைத்தொளிர் வான்றலத் தூடுபுக்
கரந்தை தீர்க்கு மமிழ்தம் பெறகருதித்
துரந்த வாத வருந்தவ மூக்கினன். (அஎ)

அரிய மாதவ வங்கி யெழுந்துலாய்
விரியு மாகத்தும் வெய்து கனற்றலாற்

பெரிது மாற்றவர் கின்றெனும் பேதுறீஇ
யுரிய தேவர் கயிலையை யுற்றனர். (அஅ)

ஆல முண்டருள் செய்த வமுதனே
கால காலனே காம தகனனே
வோலை மோல மொருமுனி மாதவச்
சீல வங்கி தெறுவதற் காற்றிலேம். (அகூ)

என்று கூறி யிறைஞ்சின ரெம்பிரா
னன்று நோக்கி நடுங்கலிர் நும்பதி
சென்று சேர்மினென் றனவர் சென்றபி
னன்று நின்னை யருட்கணி னோக்கினன்.

மாத லத்தின் வதிந்த முனிக்குநீ
சாத லைத்தவிர்க் குந்தனி வானமருந்
தீதல் செய்ம்மதி யென்றருள் செய்துனைப்
போத விட்டனன் புங்கவர் வேந்தனே

போந்த பின்னருள் போற்றியவ் வூறுநீ
ஈந்தி டாம லிகந்தொரு வஞ்சனை
வாய்ந்த நெஞ்சின் மதித்த தளிற்பொதிந்
தேந்தி வான்மிழ் தேகினை நீசனாய். (கூஉ)

தூர நின்று துலங்கிய மாதவ
வீர நின்றவிண் ணோர்க்குங் கிடைத்திடா

வார நின்றதன் வானமிழ் தம்மிதோக்
சார நின்றனை தாங்கினன் கொள்ளென்றாய். (௯௩)

வெள்ளை நீற்று விரதிய னீங்கிவன்
கள்ளை யுண்ட களிப்பின் மொழிந்தனன்
றள்ளு நீசன் றனக்கமிழ் தெங்ஙனே
நள்ளு மென்றது நாடியுணர்ந்திலன். (௯௪)

செஞ்சொல் விண்டிவன் சேயிடை நீங்கெனக்
கஞ்ச மென்கரங் காட்டி முடுக்கினை
வஞ்ச முற்றிய தென்று மதித்துநீ
யஞ்சு நெஞ்சினை போன்றகன் றோடினைய. (௯௫)

வேதம் யாவும் விளங்க வுணர்ந்தவ
ளோதி யாலுணர்ந் தானுறு கைதவம
பேதை பேதைநம் பிஞ்ஞக னாணையி
னீதி நின்றில னீள்வினைக் கோட்பட்டான். (௯௬)

அந்த விந்திர னந்தணர் சாபத்தால்
வெந்து வெந்து விழுத்தகு செலவமு
மைந்து நீங்குக வச்சிர மும்வலி
சிந்து கென்று செயிர்த்துரைத் தானரோ (௯௭)

உருத்துரைத்த வுதங்கநன் மாதவன்
பெருத்த சாபம்பின் சென்று பிடித்தலு
மருத்த மாதி யனைத்தையு நீங்கிநீ
வருத்த முற்றனை வானவர் வேந்தனே. (௯௮)

தவறில் வேதியர் தம்மை யவமதித்
துவகை நீசரி யொழுகுகின் றானெவ
னவனை யப்பொழு தேயருங் கேடெலாந்
துவர வந்துறச் சுற்றிடு மென்பவே. (௯௯)

மறைவல் லாளரை மறலி வெகுளினு
நிறைய வையினு நீடுறத் தாக்கினு
மிறுதி செய்யினு மேங்கச் சபிக்கினு
மறிவி னார்வழி பட்டே யகலுவார். (௧௦௦)

மலங்கச் சீறலு மவைதலுந் தாக்கலுங்
கலங்கச் சாபங் கரைதலுங் கோறலு
மிலங்கும் வேதியர் என்று மொருவாரற்
றலங்க மெய்துறத் தப்படு வாரவர். (௧௦௧)

வேறு.

ஆதலான்மறை யாய்ந்த வந்தண
ரோது வாய்மொழி யொன்றி னலிதோ
வேத மெய்த்தினை யோத நீங்குமா
றோது கேமது வுவந்து செய்ம்மதி. (௧௦௨)

துஞ்ச னீக்குவா னமிழ்தந் தொல்லைநாள்
விஞ்சக் கொண்டவன் மேவி வைகினார்
கஞ்ச மேவிய கடவு ளாரண
னஞ்சம் பன்றியா யன்று தேடினார்.

அனைய காரண மதனை யுன்னியே
யினிய வானமிழ் தெய்த லாமென,
நினைது வஞ்சனை நிகழ்ந்த பின்னரு
முனிவ னவ்வழி மொய்ம்பின் வைகினான். (௧0௪)

நீரி னான்மிக நிகழ்ந்த சேற்றினை
நீரி னல்லது கழுவ னேருமோ
வோரும் வேதியர் சாப மொன்றினாற்
றீரு மோவவர் தீர்க்கி னல்லதே. (௧0௫)

உ கங்க னென்னுமவ் வுறுவ ரன்றனக்
கிதங்கொள் வானமிழ் தேந்திச் சென்றுநீ
கதங்கொ ளாவகை களிந்த மென்மொழி
விதங்க ளான்மகிழ் வித்து நல்குதி. (௧0௬)

வேறு.

மலர்ந்தகம லத்தவிசின் மங்கையங்கண் வீற்றிருந்த, வலர்ந்தகடுக் கைத்தொடையா ரடிமலர்ப்பூசனைபுரிந்து, நலந்திகழ்மா யவன்மார்ப நண்ணினளா தனினந்தத், தலந்தனையா வருமொழிவர் தகுந்திருமங் கலமென்றே. (௧0எ)

மங்கலேச் சுரமுதேச் சுரரென்ன வளர்நாமத்
தங்கணே வீற்றிருந்தா ரவர்தம்மை யினிமேலே
தங்குசீர்த் துவாபரத்தி னந்தத்திற் சைமினிசீர்
பொங்குமா தரவோடும் பூசித்து வரம்பெற்று. ()

வேறு.

ஏக மாக விருந்திசைக்கு மினிய சாம வேதத்தைச், சாகை யோரா யிரமாக்கித் தக்க கரும காண்டமுநன், ஞக மீமாங் கிசத்தாணிச் சயிக்கப் பட்ட தாப்பண்ணிப், போகம் வீடு வேட்டவர்தம் பொருட்டு விளக்கு வானதனுல்                    (க0௯)

தக்க பனச வனத்தாற்குச் சாம வேதீச் சுரனெனவுந், தக்க திருமங் கலந்தனக்குச் சாம வேத புரமெனவும், பொக்க மகன்றோ ரெடுத்துரைப்ப புலவர்க் கரசே யத்தலத்து, முக்க ணொருவர் பூசனையம் முனிவ னருளாற் புரிந்தேகி.                    (கக0)

திருமங் கலத்தின் கிழக்கெல்லை சிறந்த வில்வ வனஞ்சால, மருவி விளங்கும் பூவாளூர் வரைப்பிற் றலங்க வெழுந்தொளிரு, முருவின் விளங்குங் கல்யாண சிகரத் திடையே யுறைந்தருளும், பொருவில் கருணைத் திருமூல நாதர் தமையும் பூசித்து.()

ஒருக்கும் பெரிய சாபத்தி னொழிந்து வலியும் பெருந்திருவுஞ், சிறக்க வினிய திருமூல நாத ரருளாற் சேர்ந்தல்லல், கறுக்கு மனைய நகர்மேல்பாற் கவ்வியவி ரண்டென்ன, வறுக்கும வரைப்பி னருச்சுன நல வனத்தி னடைந்திட் டளகையர்கோன்.     ()

மாறு வெறுக்கைக் கிறைமையினை மருவ மதித்துச் சிவலிங்கத், தாறு டியசெஞ் சடைப்பெருமானடித்தா மரைகள் வழிபட்டான், கூறு நின்ற வத்தலத்துங் குறுகி வழிபாடினிதாற்றி, வீறுர் துறக்கநாடையதி விசும்பாண் டிருத்தி யெனவிடுத்தான்

அருளி னுரைத்த குரவன்மொழி யனைத்துங் கேட்டுப் புருகூதன், பெருகு முழுவ லுளந்தேக்கிப் பெயர்ந்து சுவையுங் கரத்தேந்தி, வெருவு வினைகண் முழுதிரித்து விளங்குந் திருமங் கலஞ்சார்ந்து, பொருவின் முனிவன் மகிழ்கொள்ளப் புகழ்சேர் முகம னுடுங்கொடுத்தான். (கக௪)

வேறு.

அடுத்திடு மமரர் வேந்தம் கருக்கிய மாதி நல்கி, கொடுத்திடு மமுதம் வாங்கிக் கொண்டபின் னுதங்கன் சொல்வான், கடுத்தவழ் குலிச வேலோய் கமலனு தியர்கள் பூசை, தொடுத்திடுஞ் சாம வேதீச் சுரரிதோ விளங்கா நின்றூர். (ககரு)

இத்தகு சிவலிங் கத்தி னிறைவரைப் பூசித் தேகி, யுத்தம வில்வ கானத் தொழுகுபற் குனிதீ ரத்திற், பொத்தொளி மணிப்பொற் கோயிற் புட்பவிங் கரைப்பே ரன்பு, மெத்திய வுளத்தாற் பூசை விதியுளி யாற்றிப் போற்றி. (ககசு)

அண்ணலா ரருளிச் செய்த வருளினைக் குய்யக் தன்ஞே, லென்னுரு திகந்தபாவம் யாளிடுந் சாபு ந் தீமை. நணனுருச், சிவனன் சாபம் யாவையு நீ ழுவ நீக்கி, வண்ணவான் செல்வ மெய்தி முன்பு போல் வாழி யென்ருர். (ககஎ)

மெய்த்தவ வுதங்க னுள்ளா விருப்பொடு மகிழ்ந்து கூறப், பொய்த்தலை நின்று வஞ்சம் புணர்த்திடுே னுவகை பொங்கிக், கைத்தலக் கனிபோ லாங்குக் காடசிதந் தருளா நின்ற, பைத்தலை யாரம் பூண்ட பரமனைப் பூசை செய்தான். (ககஅ)

ஆங்கருள் பெற்று நீங்கி யழகிய பூவா ளூரைத், தீங்கெலா மகலச் சார்ந்து தெளிந்தபற் குனிநீ ராடி, யோங்குகல் யாண நாத ருவந்தருள் சிகரந் தாழ்ந்து, பாங்குறு கோயில் புக்குப் படிமிசை வீழ்ந் தெழுந்தான். (ககசு)

உழுவலன் பீர்ப்ப வுள்புக் கொளிர்திரு மூல நாதர், செழுமலர்ப் பாதஞ் சாலத் தெரிசித்துச் சிறியே னுங்கு, முழுவதும் பிழைத்தே னிமகு முழுவதும் பிழைக்கும் வண்ணம், விழுமிய கடைக்கணல்க வேண்டுமென் றிரந்து போற்றி. (க௨௦)

திரவிய மனைத்துங் கொண்டு திகழ்மறை விதியினுற்றால், வரமலி புட்ப லிங்க வள்ளலை யருச்சித்

தேத்திப், பிரணவத் தோடுங் கூட்டிப் பிறையறுஞ் சாந்தம் யாந்தம், விரவுமந் திரத்தை வேண்டு மளவுங்கண் மணியா லெண்ணி. (கஉக)

கோடிசெங் கதிர்க ளொன்றாக் குழுமினின் றனைய தேசுங், கோடிவெண் கதிர்க ளொன்றாக் குழுமிநி தளமு மொன்றாக், கூடினின் றொளிருங் கோலமேனியும் வாம பாகங், கூடிய வுமையுங் காளக் குடிகொள்கண் டமுமுக் கண்ணும். (கஉஉ)

தத்துவ வலியை வென்ற சனகரா தியர்கள் சூழ்ந்து, கைத்தலங் கூப்பி யேத்துங் காட்சியு மாக வெண்டோ, ளத்தனை வில்வ மூலத் தமலனை யாதுந் தோயா, முத்தனை யனைத்து மாகு முதல்வனைத் தியானஞ் செய்தான். (கஉங)

இந்திர னிவ்வா றூற்றி யிருந்திடு நாளி லோர்நாட், சந்திரன் முடியில் வேய்ந்த சங்கர னெதிரே தோன்றி, யந்தரத் தரசே சரய மகன்றது திருவுந் தேசுந், தந்தனங் கொண்டு முன்போற் றமனிய வுலகா ளென்றார். (கஉச)

உய்ந்தன னுய்ந்தே னென்று றுருமுயர் கொடியோன் பல்கால், வந்தனை புரிந்து சால வலம்வந்து கூத்து மாடிச், சிந்தையி னுவகை பொங்கத் தெண்

புன லுறைபபக் கண்கள், பந்தவல் வினைவிட் டோ
டப் பரமனை நோக்கிச் சொல்வான். (கஉரு)

கங்கையைச் சடையில் வைத்த கடவுளே சரண
ந் தெய்வக், கொங்குயிர் கடுக்கை மாலைக் குழகனே
சரணம் பசுசை, மங்கையோர் பாகம் வைத்த வள்
ளலே சரண நாயே, னிங்குனைச் சரணஞ சார்ந்தே
னென்பிழை பொறுத்தல் வேண்டும். (கஉசு)

பண்டெலா மடியே னாலும் பங்கயக் கடவு ளாலு
ம, விண்டுவி னாலு மேனை விண்ணவ ராலுங் கண்டு,
கொண்டிடப் படாத சீலக் கோலநேர் காட்டு நீல.
கண்டற்குத் தமியேன செய்யுங் கைம்மாறு காணி
லேனால், (கஉஎ)

வளங்கெழு ஞானத் தாலும் வரமலி யோகத் தா
லும், விளங்கிய கருமத் தாலு மெய்த்தவ ராதி யோ
ரக, ளுளங்கொடு வழிபா டாற்று மொருபெருங் க
டவு ளின்பாற், றுளங்கலில் லாத வன்புந் துயக்து
தல் வேண்டு மென்றான். (கஉஅ)

இரந்தபல் வரமு நல்கி யெம்பிரான் மறையு மெ
ல்லை, வரந்தரு மருளா லாங்கே வானிடை யிருந்து
நன்மை, சுரந்திடும் வியாழப் புத்தேள் சுரர்குடை
கவரி வேழ, மரம்பைய ராதி சார வமரர்கோ னனை
த்துங் கண்டான். (கஉகூ)

கண்டவன் மகிழ்ந்து தெய்வக் களிற்றினை நோக்கிச் சொல்வான்,றெண்டிரை சுருட்டுந் தீம்பாற் சிந்துவிற் பிறந்த யானை, யண்டநாஞ் சார்ந்து வைகு மத்தகு சபைக்குச் சீர்மை, கொண்டிடா தமுகு வாய்ந்த வுருப்பசி குறுகா ளாயின். (கரு0)

வேறு.

உரைசேர் மறைதெள் ளியனவி னொருமா திருக்க விடங் கொடுத்தோன், புரைதீர் சபையி னடமாடும் பொழுது புரூர வசுவென்னுந், தரையா ளொருமா னிடவேந்தன் றன்னை விழைந்த காரணத்தால், வி ரையார் கமலத் தொடைமார்ப ன் விளைத்தான் சாப மதனாலே. (கருக)

தெண்ணீர் வழக்க மொருநாளுந் தீராப் பொன் னித் தென்கரையிற், பண்ணீர் மையின்வண் டிசை முரலும் பாரி சாத வனத்தெய்தி, யுண்ணீர் மையி னலரியதவ முளூற்று நின்ற வுருப்பசியை, நண்ணீர் மையினை லழைத்திங்கு நணுகா யென்று விடை கொடுத்தான். (கருஉ)

அயிரா வதமங் கெழுந்துபோ யரிய தவத்தின் மனம்வைத்து, பெயரா திருந்தவுருப்பசியைப் பெயர்ப்பக் கருதி விளித்தார்த்திட், டுயிரா வுடன்மேல் வளிபரப்பி யொழுகித் திரண்டு துளைவாய்ந்து, மயி

ரார் காத்தால் வளைத்தலைத்து மலைத்துப் பிடித்தி ர்த் தந்தையன்றே. (கஉஉ)

அசைவற்றிருப்பி வருந்தவத்தி னற்ற விதுவெ ன் றறியாது, விசையுற் றெழுந்து வழியிக்கூராச் செ ன்று விழுந்து மூர்ச்சித்த, திசையுற் றொளிரு மணி யதன்மே லிருந்த திடையே கழிந்துலகப், பசையற றவர்களெம்பொறிபோற் பாரில் விழுந்து சிதர்ந்த தே (கஉச)

தகர்ந்து விழுந்த மணியாங்கே சகல வுருவுந் தன் னுருவாய்த், திகழ்ந்த விறைவன் சிவலிங்க வுருவா ய்த் திவள்கின் றதுமுழமே, முகந்த வொருத்த னு ருப்பசியோ டுறுமென் றிருந்த புருகூத, னிகழ்ந்த தறியா னீட்டித்த தென்னே யென்று நினைந்தெழுந் தான். (கஉரு)

பனிவான் விசும்பு முழுதளக்கும் பாரிசாத வன த்தேகி, நனிவீழ்ந் தயர்ந்த வெண்களிற்றி னலிவு நோக்கி யாங்கிருந்த, துனிதீர் கருணைப் பெருமானார் துணைத்தாண் மலர்ப்பூ சனையாற்றி, யினிதா மயிரா வதேச்சுரரென் றிட்டா னவர்க்குத் திருநாமம். ()

கந்தங் கமழு மவ்வனத்துக் கலந்த பாரிசாதேச முந்து மருளால் வெண்களிற்றின் மூர்ச்சை தீர் த்து மிகவெழுப்பி, வந்த பிரம சாபத்தை மாற்றித்

தவஞ்செய் யுருப்பசியுஞ், சித்தை மகிழ வுடன்
கொண்டு திகழ்ந்த மணிலிங் கமும்வணங்கி. (௧௩௭)

மீட்டு மருளுக் காகரமாய் விளங்கா நின்ற பூவா
ளூர், கோட்ட மகன்ற பேரன்பிற் குறுகிப் பூசை
புரிந்துறுத, ஞாட்டந் திகழ்ந்த திருமூல நாதரரு
ளாற் பரிசனத்தி, னீட்டமுடன்கொண் டெழுந்து
போயெழிலார் மருத வனஞ்சார்ந்தான். (௧௩௮)

அளகை நகரின் வீற்றிருக்கு மரசன் பூசைக் கரு
ள்புரிந்த, வளமிக் குயர்ந்த கயிலாய நாதர் தமை
யும் வந்தனைசெய, துளமிக் கெழுந்த பெருங்களிப்
போ டொளிர்பொன் னுலகம் புகுந்தின்பப், புள
க மரும்பு மூலச்சசியைப் புணர்ந்தங் கிறைமை
புரிந்திருந்தான். (௧௩௯)

மகவான் பூசை புரிந்தபடி வழுத்தி னும்ற றினி
யிரதி, தகவே வொரிந்து விழுந்தவுருத் தன்னைப்
பெறுமா வழிபட்ட, திகவா வண்ண மெடுத்துரைய
பா மென்று சூத மாதவத்தோன், முகவா ரிசமௌ
மலாலர முனிவர் தமக்கோ துவன்மாதோ. (௧௪0)

இந்திர னருச்சனைச்சருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௬௫௩.

## இரதியருச்சனைச்சருக்கம்.

முக்கணா யகர்தமை முனிந்து செய்திடுந்
தக்கனார் வேள்வியிற் சார்ந்த வானவர்
மிக்கபா தகந்தனை வீரன் சாடினான்
பக்கிடா திருந்தது பாவ வெச்சமே. (௧)

ஆணவப் பாவமு மகற்ற வெம்பிரா
னூனமில் கருணையா னுலப்பி லாற்றலிற்
றானவர் குலமெலாந் தழைப்பத் தாரகன்
வானவர் பகைவனாய் வந்து தோன்றினான். (௨)

மறந்தலை நின்றெதிர் மாய னாதியோர்
பறந்தலை முதுகிடப் படையின் வென்றுபின்
சிறந்தவா னவர்தமைச் சேரக் கொண்டுபோ
பறந்தகா தெனாவிழி தொழிலை யாக்கினான். (௩)

ஆணையைக் கடந்திடு மாற்ற லின்மையி
னாணுறு தொழிலையு நாளு மாற்றினா
ரேணழிந் தினியிருந் தாற்றி லேமெனக்
காணாத லுருவகை கரந்தி ரிந்தனர். (௪)

இரிந்தவர் திசைமுகத் திறையை யெய்தினார்
சொரிந்தனர் மலர்பதந் தொழுது தாழ்ந்தனர்
பிரிந்திட லரியவெம் பீழை நீக்கென
விரிந்திடும் புகழ்பல விளம்பி நின்றனர். (௫)

அந்தரர் தம்மொடு மடுத்துப் போற்றிய
விந்திரன் மொழிகுவா னிறைவ னேயிகு
மைந்துறு தாரகன் வயத்த ராயெழும்
சிந்தின மேவலே செய்தி ளாத்தனம். (ரு)

வன்னியந் தேவனே மடைய னாயினா
னன்னார்நீ ரடுப்பவ னாலே வேந்தனே
துன்னிடும் வளியினான் றுகளை மூன்றில்வாய்
வென்னெவம் புளோதர விலக்கன் மேயினான். (எ)

சந்திரன் மனைதொறுந் தயங்கு தீபங்க
ளுந்தியேத் திடுந்தொழி லென்மை சான்றனன்
பந்தமவிட் டகலப்பஞ் சாங்க மோதிடு
மந்தண னாயினா னமர ரேங்குரு.

நாவறந் துளந்தடு யாற நாகநா
ர்வைகை புரந்தநா னவுணர் கோனவன்
மேவுழி மேவுழிப் பின்னர் மேவியே
சேவகஞ் சேனையோ டாற்றுஞ் சேவகன். (கூ)

வேறு.

எல்லார் தமக்கு மிடுந்தொழிலை யெடுத்துக் கூறி, விழிநீர்விட், டெல்லா நமக்குங் கொடுங்கண்ம் மீண்டி நலிவி தென்செய்கே, மெல்லா நமையு முய்ங் நெறியி னியக்கா யென்ன நான்முகத்தோ; னெல

லார் தமக்கு மாதரவங் கிழம்பிப் போக்கி யிதுசெ
ய்தான். (கo)

மார னுடனே யுவளகத்தை மருவிப் பிரமன் மொழிகுவா, னீரம் வறந்த சருகருந்தி யினிய யோகத் திடையரு, வீர மிகுந்த முனிவரர்தம் விழும வுளத்துத் தவ்வலியின், நீர மகற்றி மடவாரிற் சேர்க்கு மாண்மை யுடையோயங்கள். (கக)

ஆற்றன் மிகுந்த தாரகனை யழிக்கு மாற்ற லுடையவர்க, டோற்றி யொழிந்தோர் தொகையுள்ளுந் தோற்றி யிருக்கின் றருள்ளுந், தோற்றி வருவார் குழுவுள்ளு மில்லைச் சுடர்வெண் டிங்கண்முடி, யேற்றி யிருந்த தலைவனரு ளறிவே யிளவ லேயல்லால். (கஉ)

குமரக் கடவு ளவதரிக்குங் கொள்கைக் கேது விலைதொடையிற், பமர முரலுங் குழலுமையாள் புனிமால் வரையின் வளர்கின்றாள், சமர மழுவேந் தியகரத்துத் தலைவர் யோகத் திருக்கின்ரு, ரமரர் வெருக்கின் வாய்க்கிளிபோன் றவுண ரலையா லழிகின்றார். (கங)

தேவ ரிடுக்கண் டீர்த்தருளுஞ் செவ்வேண் முருக னவ்வேளை. மூவர் தலைவ னுமையாளை முயங்கி

யருளு மவர்முயக்கம், யூவர் நிகழ்வித் திடவல்லா ர் நீயே வல்லை யிழைவிணைச்சுப்,பூவர் கணையால் யா வர்க்கும் புணர்த்து மிறைபூண் டனையதனால்.(௧௪)

ஆர்த்துப் பெருகிச் சரைகிழிய வலைத்துப் படரு ம் பெருகுநதி, யீர்த்துச் செருத்தும் புனிற்றுவை யிளங்கன் மலற வேகுங்காற், பார்த்துக் கரையினி ருந்தவர்கள் பலர்க்கும் பாவ முறுதனிற்,றீர்த்துக் கரையின் விடவல்லான் செய்யா திருப்பி னவற் குறுமே. (௧௫)

பணைத்துத் திரண்டு புடைபரந்து பனிவெண் ட ரள வடந்தாங்கி, யிணைத்துக் குவிந்த முலையாரு மெழுவிற் றிரடோ ளாடவரு, மணைத்துப் புரியுங் கலவியின் தாணை வழிய காதலினாற், கணைத்தின் க ரும்புச் சிலைக்கரத்தோய் கரிசு நினக்காம் புரியாயே ல். (௧௬)

பண்ணைப் பணைத்த பெருந்தவந்தான் படிவமெ டுத்த பயகாறிவார்க், கெண்ணாற் றொருவ ரழிதுயர மெறியு முதவி யேயன்றே, விண்ணத் தமரர்க் கோ ருதவி விளைத்த லெவர்க்குக் கிடைக்குமொளி, வண் ணக் கலைவெண மதிகவித்த மாரா நினக்குக் கிடை த்ததே. (௧எ)

விரைய வெழுந்து னகமெல்லா•மேவக் கொம்
போ யுமைமாதை, வரைய வரிய தவத்திருந்த வர
த ருருவிலனங்கனையு, முறைசெய் கருப்புச் சிலைகோ
ட்டி யுகைத்து வருதி யெனவிடுப்பத், திரைசெய் க
டல்வார் முராசாரப்பச செனறான் றென்றற் றேறி
னான். (கஅ)

ம் வ று.

எம்பிரான் யோகிடை யிருந்த சூழலை
யுமபரார் மகிழ்கொள வூககத் தெய்திய
சம்பரா ரியினரு டாங்கி முந்துா
வம்பறு வசந்தமென் பருவம் வாய்ந்ததே. (ாகூ)

தருவொடு கொடியெலாஞ் சருகு வீழ்த்திளம
பருவமென் றளிர்பல பரப்பிப் பல்வகை
யுருவளர் முகைமுகைத் துகுபைந் தேன்மலா
மருவெழ மலர்ந்தன மருங்க ரெங்கணும். (உ0)

யமதமா ருதஞ்சுனை மலிந்த நீர்படிந்
துநதுசீ தளத்ததா யூழ்த்த பன்மலர்
சிந்துபூந் தாதளாய்ச் சிறந்து மென்மெல
வுந்திவா னிறத்திரை ருகு சார்ந்ததே.

மலர்தொறும் வண்டுதேன் மாந்திப் பேடொடுங்
கலவிசெய் திசைமுரல் காட்சி மிக்கன

விலைமலி கொம்பிடை யிருந்து கோகிலக்
குலமிசை பாடமிகக் கூவி யார்த்தன. (௨௨)

வேறு.

படையெனப் பட்ட மாதர் பலர்தொடிக் கரத்தி லேந்துந், தொடையமை வீணை நல்யாழ் தொடங்கிய விசையுங் கண்டத், தடையுறு மிசையு மொன்றே யாமெனப் பாடி னார்க, ளிடைமிகத் துளங்கப் பல்லோ ரிங்கிதத் தாடி னார்கள். (௨௩)

மலர்க்கணை யைந்தும் வாங்கி வாய்த்தது வென்றி யென்னாக், கலக்கமில் லிறிவா னந்தக் கண்ணுதற் சாமி மெய்யே, யிலக்கமாய்ச் சிருங்கா ரத்தின் றுறையெலா மினிது தோற்றி, விலக்கரு மதுகை மாரன் வில்லிடைத் தொடுத்து விட்டான். (௨௪)

மதுவுமிழ் துளப மாலை மலரயன் முதலா னோரைக், கதுமெனக் கவற்றி வாட்டுங் கடுந்தொழிற் காம வாளி, விதுவணி சடில மோலி வித்தகன் மேற் செல் காலைப், பதுமமுன் னான வேனைப் பணிமல ராயே நின்ற. (௨௫)

விகாரமொன் றானும் வாளி விளைத்திடா தழிவதேனு, மகாரமே யென்ன வெங்கு மமர்ந்தரு ளமலர் தம்மைத், தகாமனச் செருக்கால் வெல்லச் சார்

தலா னெற்றிக் கண்ணோன், மகாரமே குறுகி நின்ற வார்சொடி யாரைப் பார்த்தார். (௨௬)

அண்டகோ டிகளை யெல்லா மரைக்கணத் தளவி லீற்றி, லுண்டுதேக் கிடும்பா லத்தி னொளிவிழிப் பார்வைக் காறறல், கொண்டுநேர் நிற்பார் யாரே கொழுந்தெழு மங்கி தன்மேன், மிண்டிவீழ் துய்யே யென்ன வெந்தனன் காமவேந்தன். (௨௭)

பெண்ணினைப் புணர்ந்தா னென்று மபிள்ளையை யுயிர்த்தா னென்றுந், தண்ணிய கங்கை மாதைச் சடையிடைக் கரந்தா னென்று, மென்றுமூ திகந் திகார்க்கெல்லா மிருமபொடி வாயி னட்டி, யண்ண லாங் காமன் வெந்த தறிந்தனர் சேனை மர்தர். ()

குழலவிழ்ந்து வீணை சோரக் கொம்மென விரிந்தார் சில்லோ, ரழகிய நுதல்வே ராடவையவோ வென் றூர் சில்லோர், மழலை மென் கிளவி சோர மண்ணிடை விழுந்தார் சில்லோர், தழல்விழி வேங்கை கண்டகரென வயர்ந்தார் சில்லோர். (௨௯)

அடர்மல மூல மாய வடுத்திடுங் கரும மாதித், தொடர்பெலாஞ் செயலி னீங்கித் துண்ணெனவ் விரிந்தா லென்ன, வுடல்சினச் சிலைக்கை மார ருடன்

முழு தவிந லோடும், படர்தரும் வசந்த மாதி பாறி
ன செயலி னீங்கி. (௩0)

சித்தச னொருவ னேயோ சிவபிரா னுதம்கட் டீ
யா, லுதகம வுடலம் வெந்தா னும்பரார் தாமு மெ
ல்லா, மத்தகு மதவேள் வெந்த தறிந்தவப் பொழு
தே சாலப், புத்தியு முயிரும் வெந்தார் புகலினி யெ
ன்கொ லென்றார். (௩க)

இரதியங் கறிந்தா ளந்தோ வென்னுயிர்த் தலை
வா வோவென், றரதன மணிப்பூ ணார் மருப்பிள
முலையி னீங்க, விரவிய மலர்ப்பூந் தொஙகன் மென்
குழ லோடுஞ் சோரக், கரதலத் தொடிகள் சிந்தக்
கவிழிணர்க் கொம்பின் வீழ்ந்தாள். (௩௨)

எறிந்தனள கடகச் செங்கை யிருநிலங் குழியப்
பல்கான், மறிந்தனள் புரண்டு வாய்விட் டலறின
ட்ரிவீழ் கெய்போற், செறிந்துகு கண்ணீர் மார்பிற்
செறிதுகள் கழுவா நிற்பப், பறிந்தநெட் டுயிர்ப்
பு வீங்கப் பதைத்துள மொடுங்கிச் சோர்ந்தாள்.()

எற்றினண் முலைக்கண சேப்ப வெறிந்தனள் வயி
று வீங்கப், பற்றினள் பிசைந்து செங்கை பன்மு
றை நெரித்து வைகிக், கற்றைமென் குழலுங் கை
யுங் கண்ணிழி புனலு மண்ணின், முற்றுறத் துழா
வி நிற்ப முகம்புலர்ந் தவலித் தாளால். (௩ச)

வேறு.

என்னுருயிரே யென்கண் மணியே யென்க்கோ ரருந்துணையே, நின்னு தரவா லுயிர்வாழ் வன்றி நிலையொன் றறியேனே, யின்னூரெனவே கைவிட டாவ வுருவங் காட்டாதே, யன்னு வன்னு யாங் குப்போங் தாய வலந்தெனைவிட்டே. (கூரு)

ஓராயிரங்கண மகவா னுறுமா றுடலும் பெரு வலியு, நீரார் கமலத் தயனுர் மகளா னிறைசேர் தரச்செய்யும், பேராண் மையுமால் சுடுகாட் டலை யப் பித்தேற் றியதிறமும், வாரார் முலைபங் கினரு சறுமோ மாயம் புரிந்தீயோ. (கூசு)

பஞ்சார் தருமெல் லணையிற் கலவி பயிலும் வி ளையாட்டி, னெஞ்சார் மகிழ்வா னிறைபூஞ் செண் டா னிறத்திலெறியேனே, யஞ்சா தணிமென் ளுடைகொண் டோச்சு மதுவும் புரியேனே, யெஞ் சா தரைநாண் வாங்கிக்கரங்கள் யாத்து மறியேனே.

ஊடற் கனலா லுளமவ்வாரு தழுவுற றுளையும் பருவத்தும், வீடற் கரிய நினதின் மொழியான் மேவுற் றிடுநாளும், வாடிக் கழியச் சினவிக் கொடு ஞ்சொல் வழங்கி யறியேனே, நீடற் கரிய விழிசே ந் தடுத்த நினையும் பாரேனே. (கூஅ)

உள்ளக் குறிப்பங் கிலதேற் கலவி யுளும்றுங் கா
லத்தும், கிள்ளிக் கடித்துப் புடைத்திட் டிறுக்குங்
கிளர்நல் விளையாட்டுங், கொள்ளப் புரியேன். கு
றையுண் டெனினும் பொறுத்துக் கொள்ளாமே,
தள்ளிக் கரந்து தளர்வேற் கிரங்காய் தகுமோ விது
தகுமோ. (௩௯)

கலவித் தொழிலிற் கலைநல் லணியுங் கையா ன
ளி திருத்திக், குலவிக் கணமும் பிரிதம் கிசையாக்
கோமாற் கிதுபொழுது, சுலவித் தரையிற் குழன்
மா சடையச் சுடர்மெய் யணியழிய, நிலவித் துயா
த் தழிவேற் கருளா நிலைவந் தமையென்னே. (௪0)

வேறு.

மெலிந்துயிர் முழுதுஞ் சாம்பி மேதகு மிரதி
மெய்ச்சீர், நலிந்தழிந திரங்கு மெல்லை நாரத முனி
வன் போந்தான், பொலிந்தவல் லிடும்பைச் சேற்
றுட் புதையுண்டு கிடந்த நெஞ்சம், வலிந்துகொ
ண் டெழுந்து மெல்ல வணங்கினண மாரன் றேவி.

பெருகிய துன்பத் தாழ்ந்து பெண்கொடி யரற்
றலோடு, முருகிநீ ராகி யோட லுற்றனண் மரங்க
ளெல்லாங், குருகினங் கண்ணீர் வாரக் குலைந்தன
கறித்த வும்பும், மருவிய வாய வாகி மானின மய
ங்கி நின்ற. (௪௨)

நெட்டுயிர்ப் புலைவா யிட்ட நெடுங்குரு குயிர்க் குங் காற்றின், விட்டனள் கண்டம் விம்ம விம்மி னள்கொழுகொம் பில்லர், மட்டிளங் கொடியி னொல்கி மருங்கொரு மதலை பற்றி, மொட்டிள முலையி ற் கண்ணீர் முகிலெனப் பொழிந்து நின்றாள். ()

நின்றவண் முகத்தை நோக்கி நிரம்பிய கருணை கூர, நன்றிசை யெழுப்பும் வீணை நாரத முனிவ ன் மெய்த்தோண், மன்றலங் கூந்தற் செவ்வாய் வனமுலை யிரதி துன்பத், தொன்றுதல் வேண்டா வென்று தேற்றின னுரைக்க லுற்றான். (சச)

செய்வினை நுகர்ந்தா லன்றித் தீர்வகை யில்லை ண்டாய், நைவினை யதனாற் பின்னு நலிவதே யன்றி வேறிங், குய்வினை யுறுவ துண்டோ வுய்வகை யு ரைப்பக் கேளாய், கைவினைச் சிலையின் வல்ல காம ற்குப் பிறவி மூன்று. (சரு)

தளவுறழ் நகையாள் பாகஞ் சார்ந்தவ ரிடத்தி லொன்று, துளவமா லிகையான் பாங்கர்த் தோன் றிய பிறவி யொன்று, வளரிளங் கொம்பி ரன்னாய். மாவிடைப் பிறந்த யாக்கை, யளவிடற் கரிய பெம் மா னழித்தவிவ் வுருவ மாகும. (சசு)

ஏதமில் லாத வேனைப் பிறவியு மியமபக் கேளா, யாதவர் குலத்திற் கண்ண னெனவரு மாயன் புல்,

கி, யோதுருக் குமணி தன்பா லுயிர்த்திடப் பட்டு
ன் கேள்வன், பேதமில் குணங்கள் சான்ற பிரத்தி
யு மனனென் றல்கும். (சஎ)

சங்கணி கரத்தாய் நீயுஞ் சம்பரன் மனையிற் றெ
ய்வப், பங்கயன் சாபந் தாங்கிப் பயில்வுற வதிவை
கண்டா, யங்கிரு வீர்க்குங் கூட்ட மாகுமிவ் வாறு
தோற்றம், வெங்கணை மாரம் செய்தும் வினையை
யும் விரிப்பக் கேளாய். (சஅ)

வேறு.

பண்டுவரு கற்பத்திற் பரிந்துபல மணிவரன்றி,
மண்டியெழு காவிரிக்கு வடகரையி னீர்முகந்து,
கொண்டல்படி வராகவரைக் குலவியசா ரலின்க
ரெர்ன், றுண்டதனைக் கேமபுர மெனவுரைப்ப ருல
கத்தோர். (சகூ)

அப்பதியி லிருந்துலக மாள்கின்ற முடிவேந்த,
ரொப்பரிய பெருவலியா ரோங்கியபே ரழகினு, ரொ
ப்பொருளு மிரவலருக் கில்லையென்று தேகொடுக்
குந், தப்புறுவள் ளன்மையினன் சுந்தரனென் றிய
ற்பெயரான். (ருO)

ஆங்கவன்றன் பேரழகுக் கமைந்த பெரு வனப்
பினளாய், நீங்கரிய பெருங்காத னிறைந்தவுளத்

தினளாகி, யோங்கியநன் மனைவாழ்க்கைக் குகந்த பெருங் கற்புடையர், ளீங்கவற்கே மனையாள் விரதி யெனு நீயாறைய. (ருக)

இருதலைசே ரொருபுள்ளி னேகவுயி ராய்நீவிர், மருவியிட ரறியாமே வாழுநா ளிளமேயனிற், பருவ மெடுத் தலுங்கலவி பண்பினொடு புரிவதற்கு, முரு குயிர்க்குங் கருங்குழலாய் முன்னினனினை னொடும் பொழிலின். (ருஉ)

காவிரியின் மணல்பரந்து கவின்மிகுமுள் ளிட மெல்லாம், பூவிருந்த மதுத்துளியும் பூந்தாது மிள ந்தளிரு, மாவிரவு மிதழ்க்குலமு மலிந்துமது கரத் திசையும், பூவிரதக் குயிற்குரலுங் குலாயபொழி லா டையர்ந்தான். (ருஙு)

விரைந்துவருங் காவிரியின் மென்மணல்சேர் க ரையூடே, வரைந்தகொடுங் கணையினொடு வார்சி லைசெங் கரத்தேந்திக், கரைந்துகுபே ரன்புளத்துக் காதலியின் னுடன்செல்வா, னிரைந்திரியும் விலங் கினமு மெதிர்கண்ட தினிதெய்தான். (ருச)

வேறு.

கண்டு வென்றொரு மாதவன் காதலி னுளேவள சி ரண்ட ரும்வியத் தக்க வழகுடை மான்களுந்

தண்ட லைக்குளிர் நீழலின் மேய்ந்தன தம்மைநேர்
கண்டன்னன்சரம் வாங்கி விடுத்தனன் காவலன். ()

கலைவி ழுந்தது பெண்ணது கண்டு கலங்கிநெஞ்
சுலைய வோடி யுறுதவன் றனி லுறப்பணிந்
தலையு நீள்விழி வார்புனல் சோர வழுதுமெய்
க்லைய நீங்கரி தான பெருந்துயர் கொண்டதே. ()

இணையி லாத பெருந்தவ னின்ன லுழக்குறும்,
பிணையை நோக்கிப் பெருந்துயர் தானு முழந்தன
ன், றுணைநெடுஞ்செவி யூழிக்கண் ணீரைத் துடை
த்துயிர்ப், பணைய மெல்ல வுடலந்தை வந்தறை
கிற்பனுல். (௫௪)

பிள்ளை போலப் பெருகிய காதலி னுல்வளர், து
ள்ளு மான்க ளிரண்டினு ளொன்றைத் தொலைத்தி
வ, ணள்ளி யென்று நடுங்கவிவ் வாறு நவைபுரி,
தொள்ளை நெஞ்சினன் முண்ணென நீறுய்த் தொ
லைகவே. (௫௮)

அன்ன வன்மனை வாழ்க்கைக் கருந்துணை யான
வ, ளின்ன மான்பிணை யெய்திய வெல்லையில்லாத்
துயர், தன்னை யெய்தித் தளர்கவெ னச்சபித் தான
து,பன்ன் முன்னவன் கேட்டுப் பருவர லுற்றனன்

வேறு.

அடுத்தனன் விரைந்தருந் தவனைப் பத்திமை
தொடுத்தநெஞ் சொடுமடி தொழுது போற்றினன்
கெடுத்தனை பொறியினேய் கெழுவு மான்கலை
படுத்தன னெனதெனப் பகுத்த றிந்திலேன். (சு0)

மடமையாற் சிறியனேன் புரிந்த வன்பிழைக்
கடலையா கெனவெனை யழன்று ரைத்தனை
யடியனே னுனைச்சர ணடைந்து ளேனினிக
கடிதரா தருள்வதுன் கடமை யென்றனன். (சுக)

பத்திசெய் மன்னவன பரிவு நோக்கிய
வுத்தம முனிவர னுவந்து கூறுவான்
கைத்தவெஞ் சாபமுங் கழித ராதலி
தித்தனு விடத்துறு திருப்பக் கார்த்துமேல் (சுஉ)

திருமகள் வயிற்றினிற் செங்கண் மாயனுக்
குருகெழு காமனு யுதிப்பை யீங்குடன்
மருவிய மனைவியும் வயங்கி ரதியா
மிருதிறத் தீருமின் பியற்றி வாழுநாள். (சுங)

பங்கயன் சூழ்ச்சியாற் பரம னார்மிசைக்
கொங்குயி ரைங்கணை குறித்து விட்டுநீ
யங்கவர் விழியினு லழிந்து நீறுவை
பொங்கெழி லிரதியும் புலம்பி னூழ்ந்துபின் (சுச)

ஒழுகிய பற்குனி யுந்தி சேர்ந்துநீர்
முழுகிபங் குயர்திரு மூல நாதர்தம்
விழுமிய பூசனை விளைத்து மீட்டுனைத்
தழுவுவள் போகெனச் சாற்றி விட்டனன். (கரு)

மாதவ னிவ்வகை வகுத்தன் றோதலி
னீதுய ருழநதனை நீறு பூட்டநின்
ஞ்தனைப் பெறுவது நாடி னெம்பிரான்
றீதறு பூசனை செய்தல் வேணடுமால். (கசா)

மாதர்நல் லாய்வழி பாடு கொண்டுநின்
னேதமிக் கொழிதர வின்ப நல்குவார
மூதறி வருடிரு மூல நாதரே
யோதிய வுலகில்வே றொருவ ரில்லையே. (கஎ)

எத்தலத் தவர்மகிழ்ந் திருக்கின் றாரென்ற்
பைத்தெழு திரைப்புனல் பரக்கும் பற்குனி
யுத்தம நதிக்கரை யுலகெ லாந்தொழ
மெத்திய விரைகமழ் வில்வ கானனம் (கஅ)

வேறு.

வரமல் கியபற் குனிக்கரையின் வயங்குந் திருமங் கலதலமும், பிரம னமர்ந்து மகமாற்றிட் டிணங்கி யிருந்த கலைமர்து, பாவு புனலாய் வரிமகிழ்ந்து படிந்த காயத் திரிநதிப்பால், விரவு மன்பி லெனுந் தலமும் ஏபலவ வனமு மிகச்சிறந்த. (கசு)

திருமங் கலத்திற் றிருமாது சேர்ந்து திருமாலினையடுத்தாள், அருண்மிக் குடையார் மகிழுன்பிலாலந் துறையில் வாணிதுனி, யொருவி மலமரான றனையனயி னுமறு ணீயு மவற்றிடையே, மருவி வளர்கூ விளநகரின் மதனை யடைதற் கையமிலை. ()

கொன்றை நறுங்கூ விளமிலிங்கங் குருவே சிவயோ கியரிவர்பால், மன்ற விளங்கிச் சிவபெருமான வதியு மெனுமா மறையந்த, நன்றி வளர்வில் வமுஞ்சிவயோ கியரு நாத னருட்குறியு, மொன்றி விளங்குங் கலயாண புரத்தின் பெருமை யுரைப்பரிதால். (எக)

கயிலை நெடுமந் தாரமுதற்றென் கடலீ றுள வி டைஞாலம், பயிலுஞ் சுயம்புச் சிவலிங்கம் பலவும் பூசை புரிந்தபயன், செயிரி னறுங்கூ விளவனத்திற் றிகழ முளைத்த சுயம்புலிங்கத், தெழில்கள் பொழிந் தார் தமைப்பூசை யியற்றி னோர்க்கு வருமனறே. ()

அதிபா தகமா பாதகமே யுறையு முபபா தகமென்னுங், கதிதீர் வினைக்கும் வெவ்வேறு கழுவாய் புரியு வேண்டாதண், ணதிசேர் முடியார் திருமூலநாதர் பூசை யாற்றியவர், துதிசேர் பணியு மொருபணியைத் துலங்கப் புரித லேயமையுமால் (எரு)

வேத முழுங்கும் பூவாளூர் விளங்க விளங்குந் திருமூல, நாதர் பெருமை மறையானு நவிற்றற் கரி தா யினுமந்த, வாதி பகவ னருளொளியி லடைதற் குரிய செந்நெறியா, யோரது நிலைமைத தொருமனு வுண் டுதன்சீ ருரைப்பக் கேளணங்கே. (எச)

பாவ மகற்றும் பிணியறுக்கும் பட்டர்பேய் துரக் கு மிராக்கதமு, நீவு மாட்டம் புரிதெய்வ நிலைமை யனைத்து மிகக்கெடுக்கு, மோவில் வெறுக்கை யனைத் தினையு முதவுந் தேவர் கதிவழங்கு, மேவு மரு ளிற் படிவிக்கும் வீடும் புகுந்து மனுவதுவே. ()

மறையின் முடிவா முபநிடத வகுப்பின் வடித்த சாரமாய, நிறையப் பிறவி தொறுந்தவங்க ணிரப்பி னோர்க்கே யுபதேச, முறைமை யருளப் படுவதாய் மொய்த்த சித்தி யனைத்தினையு, முறுவித் திடுவ தாய் விளங்கு முரைத்த வந்த மந்திரமே. (எசு)

வேறு.

அந்தர ரெவர்க்கு மேலா மமரநா யகரே போல, மந்திர மெவைக்கு மேலாய் வகுத்திடு மந்திரந்தா, னைந்தெழுத் தவற்றின் முன்னே பிரணவங் கூட்டி யாறு, மந்தண மாகக் கொள்வர் மறையவ ராதி மூவர். (எஎ)

ரைசெய்வார் மதலாயரிய பெருந்தவத்தாற், கொண் டுவெமது வினைநீக்கிக் கோதிலாத சுதிசேர்தத்தாய்.

வாழி வாழி நெடுங்கால மண்மேனீநின் குலம்வா ழி, வாழி யெடுத்த கரதலத்தா னீறியா னுலகிற் சே றுமெனக், கேழில் விமான முகைத்திட்டான் ளா பேருவகை யொடுமுனிவ, னேழை பாகர் திருவடி யின் மீட்டும் பூசை யியற்றினான். (உரு)

சின்னாள் விலவ வனத்திருந்து தேவர் பெருமா னருள்பெற்றுத், தன்னாச்சிரமத் தினிதேகித் தழை த்த மகிழ்ச்சி யுடன்வாழ்ந்தான், கொன்னு தரவிற் பற்குனிநீர் குடைந்து மைப்பாயசபிண்ட, மன் னு தரவி னிடுவோரும் வானின் வேட்ட கதியடை வார். (உசா)

வழங்கும் புனற்பற் குனிநதியின் வரவும் வில்வ வனங்கீர்த்தி, தழங்கு கயையின் மேம்பட்ட தகவு ம் விளங்க வெடுத்துரைத்தாம், பழங்கணறுக்கு ம ஞ்சுளனென் றொருவன் மகளைப் பயந்தபடி, யொழு ங்கு மனத்தீர் கேண்மினென வுரைக்கப் புகுந்தா னுயர்சூதன். (உஎ)

கயாபற்குனிச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சாசாசு.

## மஞ்சுளன் மகப்பெறு சருககம.

அஞ்சமும் பின்றியு மாயிரு வோரு மளந்தெட்டா, நஞ்சணி கண்டர்கல் யாண புரத்தி னயந்துள்ளான், மஞ்சுள னென்ற வியற்பெய ரான்பின் வருணத்தா, னெஞ்சலி லாத விரும்பொரு ளாக்க மியைந்துள்ளான். (க)

மாதொரு பாகர் மலர்க்கழ லன்றி வணங்காத, மேதகு பத்தியன் மெய்யுணர் சிந்தையன் வெண்ணீறுஞ், சாதன மும்பொரு ளென்று தரித்தவ ளராவேத, நீதியி னுலொழுக் கத்தின் வழாவகை நின்றுள்ளான். (உ)

இத்தகு மஞ்சுள னின்புறு நன்மனை வாழ்க்கையாள், புத்தமிழ் தன்னவள் காந்தி மதிப்பெயர் பூண்டுள்ளாண், மெத்திய கற்பி னருந்ததி நாண விளங்குற்றுள், கைத்தலி லாதவன் பாலிவர் வாழ்தரு காலத்து. (ரு)

வேறு

மக்கட்பேற் றின்மையினுன் வருபரிவை மஞ்சுளன்றுன், முக்கட்டா தையைப்பணிந்து முடித்தருமெனப் பூவாளூர், நக்கர்க்காம் பணிவிடைக ளாயந தாற்றி யஞ்செழுத்தும், பொக்கத்தீ வினையோட்டப் புகன்றிருந்து கணிக்கின்றுன். (ச)

செவ்வண்ணத் திருமேனித் திருமூல நாதர்பா, லிவ்வண்ண மஞ்சுளன்மிக் கிரும்பணிகள் செய்திரு ப்பத், தெவ்வரணப் புரம்பொடியச் சிரித்தவரைக் கயிலையிடைக், கைவண்ண மலர்கூப்பிக் கழல்வண ங்கி யுமைமரீது. (ரு)

முருகுயிர்நந் தனவனத்து மொயயழகு காண்ப தற்கு, மருவுமுளம் வேட்டதென வணங்குமிடு கி டைதுவளத், திருவின்மணி யோவியமவாய் திறந்த தென வாய்மலர்த்திப், பெருகுகட லமிழ்தனைய பெ ருஞ்சுவைச்சொல் லருளிரந்தாள். (சு)

வெள்ளிவரை வீற்றிருக்கும் விமலனு ரதற்கிசை ந்து, கள்ளுயிர்க்கு மலர்க்கூந்தற் கவுரியொடு வி டைமேற்கொண், டள்ளிலைவேற் கணநாத ரருகு வர வழியியங்கி, யுள்ளமகிழ்ச் சியினடுத்தீ ரோங் கியநந் தனவனத்தை. (எ)

வேறு.

பொன்மலர்ந்துபொன் காய்க்குமரங்களு
மின்மலர்ந்து விளங்கிழை யர்கடக
டென்மலர்ந்த சினைதொறுங் காய்த்திடு
நன்மரங்களு நண்ணுமோர் பாலெலாம். (அ)

மணிகள் காய்க்கு மரங்களும் பல்வகை
யணிகள் காய்க்கு மரங்களு மாறெனுந்

தணிவில் வான்சுவை தாங்குநா லுண்டியும்
பணிவின் வீசு மரமுமோர் பாலெலாம். (கூ)
தேவ ரைத்தருந் தெய்வ மரங்களுந்
தேவி யர்த்தருந் தெய்வ மரங்களு
மேதவி லாதிரு வோரையு முய்த்திடுந்
தாவி லாத மரமுமோர் சாரெலாம். (௧௦)
தமனி யச்செழு வண்டினந் தாதுணத்
தமனி யப்புதுத் தேமலர் தாமலர்ந்
திமிழ்ம ணந்திசை யெட்டும் விராய்மது
வுமிழ்ம ரங்களு மோங்குமோர் சாரெலாம். (௧௧)
பஞ்ச ணையம ளிக்குலம் பள்ளியின்
மஞ்ச ரின்புற வைக்கு மரங்களுந்
துஞ்ச லுருயிர் தோற்று மரங்களு
மெஞ்ச லின்றி யிணர்க்குமோர் சாரெலாம். (௧௨)
அதிச யம்பல வாக்கு மரங்களுங்
கதிகள் பற்பல காட்டு மரங்களும்
புதிய போகம் புணர்த்து மரங்களு
நிதிம ரங்களு நீடுமோர் சாரெலாம். (௧௩)
காமர் வல்லி கலந்த மரங்களுந்
தூம ணிச்சிறை துன்றிய புட்குல
மேம மல்க விருக்கு மரங்களுந்
தேம லர்த்திரள் சிந்துமோர் சாரெலாம். (௧௪)

ஆடகப்படி யான்ற தடாகமு
மாடகத்தி னவிர்மண லெக்கரு
மாடகத்தினன் றாக்கிய குன்றமும்
பீடு முல்கிப் பிறங்குமோர் சாரெலாம். (கரு)

## வேறு.

அளவில் வளமினனணாநதுவன்றி யாறறுங் கரு மந் தனக்கிசையய, வளமிக் கெவர்க்குமெஞ்ஞான்று ம வழங்கா நிற்கு நந்தனத்தை, விளர்வல் விடையூர்ந் தினிதடுத்த விமலர் காட்ட வவ்வனத்தி, னுள வெவ் வளனு நோக்கி னுலக முயிர்த்த மலைமடந்தை. (கசா)

பெருமை வளர்நந் தனவனத்தின் பெருமை நோக்கி மகிழ்ந்ததற்பின், முருகு விரியு மலர்க்கூந்தன் முதல்வி யொருசோ தனைப்பொருட்டு, மருமென் மலர்ப்பூம் பசுஞ்சினையோர் மரத்தை நோக்கி மற்றெமக்குப், பொருவில் வனப்பி னொருமகளைப் பொற்ப வழங்கு வாயென்றாள். (கஎ)

பொன்னஞ் சிலம்பின் மடமாது புகன்ற மணி வாய்மொழியெழுமுன், மன்னுந் தளிர்க்கற் பகலதைதன் மருங்கு வேறொன் றுயிர்த்ததுபோற், முன் னுஞ் சினையின் மரமதுதான் சுரமா மகளிர் நறு

முறுப்ப, மின்னுங் கலர்க ளுருக்கதிர்ப்ப விளங்கோர் மகளைக் கொடுத்ததே. (கஅ)

வேறு.

கார்பூத்த நறுங்குழலுஞ் மதிநுதலுங் கயல்விழியுங் கனிச்செவ் வாயுஞ், சீர்பூத்த பணைத்தோளுந் தளிர்க்கரமுங் குவிமுலையுஞ் சிறந்த கங்கை, நீர்பூத்த சுழியனைய வுந்தியும்பே ரல்குலுநீள் கதலிவென்ற, வேர்பூத்த குறங்குமலர்ச் சீறடியு மழகெறிபப வெதிரே நின்றாள். (ககூ)

கற்பகத்தண் மரமுயிர்த்த கன்னியெதிர் நிற்றலொடுங் கதிர்த்த செம்பொன், வெற்புயிர்த்த மகனோக்கித் தனக்கொருமா மகளெனவே விரும்பிச் சென்று, பொற்பவிரு கரத்தெடுத்துப் பாலரும்ப முலைத்தலத்துப் புல்கி வாயி, னற்பினொடு முத்தாடியுச்சியுமோந் தகமகிழ்ச்சி யார்ந்து பின்னர். ()

வேறு.

சுந்தர மிகுந்தவத் தோகைக் கோர்பெயர்
சந்திர வதியெனத் தரித்து நின்றன
ளந்தரத் தமரருக் கிரங்கி யாலமுண்
கந்தரத் திறைவருங் கடைக்க ணித்தன. (உக)

உமையொடு கற்பக முயிர்த்த தையலை
யிமிலெரு ழேற்றின்மே லேற்றிக் கொண்டுபோய்த்

தமதருட் கோயிலைச் சார்ந்து வைகினா
ரிமையவ ரனைவரு மிறைஞ்சி யேத்தவே (உஉ)

சந்திர வதியெனுந் தைய லன்றுதொட்
டந்தமி லிருமுது குரவர்க் கன்பினாற்
கொந்தவிழ் மலர்பல கொய்து நல்குபு
வந்தனை புரிந்துடன் வதிய லுற்றனள். (உங)

ஒருதின முன்புபோ லுவகை மல்குற
விருமுது குரவர்க்கு மிணர்த்த பூமலர்
தருவது பொருட்டிருந் தாதுத் தேமலர்
மருவுமுய் யானநீள் வனத்தைச் சார்ந்தனள். ()

வேறு.

தம்பிரான் பணிவிடையிற் றவறாத கணநாதன்,
வம்பில்வா ளவரேத்து மணிகூட னெனும்பெய
ரா, னிம்பர்வாழ் மஞ்சுளன்ற னிருந்தவமுற் றிய
திறத்தா, லம்பர்நீ ளுய்யானத் தவனுமடுத் தான
ன்றே. (உரு)

பண்டைவிதி தலைக்கூட்டப் படர்ந்தடுத்த மணி
கூடன், கண்டனன்சந் திரவதியைக் கற்பகப்பூங்
கொம்பனைய, தொண்டைநறுஞ் செங்கனிவாய்த்
தூமுறுவற் பொற்றொடியு, மண்டியெழுங் காதன்
மிக மணிகூடன் றனைக்கண்டாள். (உசு)

மாம்வே ளதுநோக்கி மலர்வாளி தொடுத்திட்டா
ன், வாரமா ரிருவோரு மலர்வாளிக் கிலக்கமாய்ச்,
சோர்நாண் மடமாதி தொலைவெய்த வறிவாதி, நிர
மாட் ாரரிது சிந்தையினை திறந்தினர். (உஎ)

அழிந்தவுள்ளம் புறந்தோற்று தாம்றலிறைற் கரந்
துபோய்ப், பொழிந்தமதுப் பூங்கொன்றைப் புனி
தர்திரு வடிபணிந்தார், குழிந்தவிழிக் கணத்திறெ
டு கூத்தயரு மாத்தனர், மொழிந்தனர்மற் றவர்கரு
த்தின் முற்றியமை யலையோர்ந்தே. (உஅ)

நீயிர்மத வேள்கணைக்கு நிறையழிந்தீ ரிக்கயிலை,
யாயிருமுத் தியையடுத்தோர் வதிகின்ற வரைப்பா
கு, மேயினவிண் கதிகளினம் மெய்யருள்சே ராத
தனாற், போயினிது பிறந்திடுக புரைதவிர்க்கும் பூ
மியின்கண். (உகூ)

நுங்கள்கருத் தினையாங்கு நூல்வழியே கல்யாண,
மங்கலத்தான் முடிக்கின்று மணிசூடன் பழமலை
யிற், றங்கியிநம் மருட்பத்தன் சந்திரகுத் தனுக்கு
ரிய, வங்கலுழ்மே னியினிலையென் பாளகட்டிற்
றோன்றுகவே. (ஙo)

விளங்கிழைச்சந் திரவதிநீ மெய்வளர்பூ வாளூரி
ற், றுளங்கலிலா மனத்தெம்மைத் தொழுதேத்து

மஞ்சுளன்றன், களங்கமிலாக் கற்புடைய சுந்தரி தன்வயிற்றில், வளங்குலவத் தோன்றுகவல் வீரைந்திடுமி னெனவிடுத்தார். (௯௧)

ஆமென்று சடைப்பெருமா னுணவிலக் குரிதென்மே, வெமென்று பிரவாமை விருத்தகிரி யுடையவர்பாற், பேறென்று மணிசூடன் பிறந்தனன் சந்திரகுந்தன், றேமென்று பெயராதுசந் திரசூடனெனத்தரித்தான். (௯௨)

பகையுறவு தெரிவிக்கும் பழமறையா கிகள்பயின்று, வகைபெறுநல் லொழுக்கத்தின் வளர்ந்தன்ன்சந் திரசூடன், முகைநகைச்சந் திரவதியு மொயயெழிற்பூ வானேரிற், றகைபெறுமஞ் சுளன்மனைவி காந்திமதி தரவளர்ந்தாள். (௯௯)

குமுதமலரெனக்காந்தி கொழித்தொளிரு முருநோக்கிக், குமுதநறுஞ் செங்கனிவாய்க் கோற்றொடிக்கு மஞ்சுளன்றான், குமுதையெனப் பெயரிட்டான் குழப்பருவத் தியல்பொரீஇக், குமுதையுநல் லொழுக்கத்தின் கொழுந்துபோல் வளர்கின்றாள்.

, மீதனித்தான் மஞ்சுளன்பெண் மகப்பயந்த வாறுரைத்தாங், கோதகன்ற முனிவர்காள் குணமிகுசந் திரசூட, னீதியினல் வழிபட்ட நெறியுரைத்

தூங் கேண்மினென, வாதரவாற் சூதமுனி யருந்த வர்க்கு மொழியுமால். (௩௫)

மஞ்சுளன்மகப்பெறுசருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௭0௪.

## சந்திரசூடன்வழிபடுசருக்கம்.

அமுத மென்மொழி யணிநடை மயிலினிளஞ் சாயற், குமுதை யென்பவள் குழப்பரு வத்திய லொழிந்து, தமர்க ளிப்புறப் பேதைமை சார்ந்தது தணந்திட், டுமிழ்ம ணச்செழு முகைபொரூஉம் பெதும்பையுற் றனளால். (௧)

மணஞ்செய் காலந்தன் மகட்குவந் தடுத்தன்ம நோக்கிக், குணங்க ளாதியா லொத்தநற் குமரனை யிவட்குப், பிணங்கு றுவகை யாஙனம் பெறுகுது மென்ன, வணங்கி ஞனுள மருந்தவ மாற்றுமஞ் சுளன்றான். (௨)

பரிவினோடவ னிருக்குநா ளொருதினம் பரந்த, விரவி னீளணைப் பள்ளியி னிருந்துயி லுறுங்கால், விரவு சீர்க்கன வத்திடை மேவியங் குறைப்பார், தெரிய வோரடி யாரெனத் திருமேல் நாதர். (௩)

மஞ்சு ளாவெழில் வாய்ந்தநின் மகட்குநே ரான, விஞ்சு பேரெழிற் குமரனை விரையவே தருதும்பொ

ஞ்சுண்மாழ்கலை நீயென வுரைத்துட னிங்கிச், செ
ஞ்ச வேவளர் வில்வமூ லத்தினைச் சேர்ந்தார். (௪)

துயிலு ணர்ந்தபின் கனவினை நனவெனத் துணி
ந்தே, யயில்கொள் சூலத்த ரருளிதோ வெனவதி
சயித்துக், குயிலின் மென்மொழிக் கோற்றொடி ம
னைவிக்குக் கூறிச், செயிரி லாதவ னிருந்தனன் பணி
விடை செய்து. (௫)

வில்வ மூலத்தி லிருந்தருள் விமலனார் விளம்பு,
நல்ல வாய்மொழி கேட்டிவர் நயந்தன ரிருப்பச்,
செல்வ நீடிய சந்திர சூடனுஞ் செயிர்தீர், கல்வி கே
ள்வியின் முதிர்ந்தனன் காளையாய் வளர்ந்தான். ()

விருத்த மால்வரை மேவிய வேதநா யகனே,
பெருத்த வான்பொரு ளெனவவற் பேணுமார் வத்
தோ, டருத்த மீட்டுதன் குலத்திறே டியைந்தவா
ள் வழங்கொண், டொருத்த னேயிரு பொருளுக்கு
மிடமென வுயர்ந்தான். (எ)

மாதி ரந்தொறுஞ் சென்றுவண் பொருள்பல வீ
ட்டிப், போது வாரொரு தினம்பெகுழிற் கதிர்மணிர
ப்பவளஞ், சீத நித்திலம் வாம்பரித் திரள்சினக்
கரிக, ளோதி விற்பதற் கடுத்தனன் கேமமா புரமே.

பொருள்கள் விற்றவ னெஞ்சிய பொருள்விலை செயவுங், கருணை நாயகன் காமரு சேவடி தொழவு, மருவு பல்பரி சனத்தொடும் வழிநடைக் கொண்டு, பெருகு மோகையி னடுத்தனன் பிறங்குபூ வாளூர். (க0)

ஒழுகு பற்குனி யாற்றினை யுற்றிரும் புனலின், முழுகி நீர்க்கட னிகண் முறையுளி யியற்றிப், பழுதி லாத்திருக் கோயிலைப் பண்பொடு புகுத்துத், தொழுது தாழ்ந்துசூழ்ந் தேத்தினன் சோதிநாயகனை.

கண்டு ளார்வினை யறுக்குங்கல் யாணவான் சிகரத், தண்டர் நாதனைத் திருமூல நாதனை யால, முண்ட நீலமா மிடற்றினை யுணர்விறந் துயிரிற், கொண்டு நின்றுகண் ணீருகக் குழைந்துளங் கரைந்தான். (கக)

நெடிது நின்றவ னரிதுநீர்ந் தேகிநீர் சூழ்ந்து, படியி லங்கினு மெட்டினும் பன்முறை வணங்கிக் கடிகொள் கொன்றையான் றிருவெழுத் தைந்தையுங் கணித்துப், பிடிகொண் டானெனப் பற்றிய வுளத்தொடும் பெயர்ந்தான். (கஉ)

பெரிய கோபுர வாய்தல்பின் னிடப்புறத் தேகிச், சுரிசங் கோலிடும் பற்குனித் தொடுகரைப் பாங்கர், விரியு மாமலர்ச் சோலையின் மென்மெல மேவி,

யுரிய தாம்பொதி சோலைசூழ்ந் தாரொடு, முண்டான். (கஙு)

வெள்ளை நுண்மணலெக்கரிற் கம்பலம் விரித்துத, தெள்ளுபேரெழிற் பட்டுடை செறித்தவாரணையின், ளள்ளி யிரம்புதுத் தேறன்மென் காலெடுத் திறைப்ப, வெள்ள லேதுமிலாதவ னயர்வுயிர்த் திருந்தான். (கச)

பொன்னினன்னநுண் டாதுதூம் புன்னையங் கானி, னன்னர் மெனனிழ லுய்கர்தங் திலகன்வந் திருப்ப, வன்ன மென்னடைக குமுதையும் பண்ணையாட் டயர்வா, மூன்னி முன்னின் முன்பு போன் மொய்ம்மலர்ப் பொதும்பர். (கரு)

வேறு.

பாங்கியர் மருங்கு சூழப் பன்மணி யூசலாடித், தேங்கிசைப் பாடலோடுஞ் செறிந்தவம் மனைகளாடி, வீங்குநீர் கதிபுக்காடி விரியிணர் மலர்கள் கொய்வா, ளோங்கிய பொதும்ப ரூடே யுலாத்தருந் தொழிலின் மிககாள். (கசு)

இயல்பினன் மலர்கள் கொய்திட் டியங்குவா ளொருநடிச் செம்மல், பயிலிய நாகச் சூழல் படர்ந்தன ள் படர்ந்த லோடும், வெயிலுமிழ் மணிப்பூண் மார்

பன் மின்னிடை மாதைக் கண்டா, னயிலுறழ் தடங்கண் மாது மாடவன் றன்னைக் கண்டாள். (கஎ)

காண்டலும் பண்டைப் பாலுங் கதுமெனப் பாலதாகத், தூண்டினன் மாரன் வாளி துறுக்கெனவுளத்தைத் தையீர்ப்பப், பூண்டகு மார்பிற் றோன்றல் புலவர்தம் மகளோ வானறி, யாண்டகு தரையி னோற்கு மாதவர் மகளோ வென்றான். (கஅ)

வாடின குழலின் மாலை வண்டுங்கூட் டுண்ணு நின்ற, வோடின செவியின் முட்டி யுழிதருவினவாட் கண்கள், கூடின வாடை மாசு கோலமெய் யிழற்றிற் றொள்வே, ராடின வணங்கோ வல்ல ளணங்கு செய் நங்கை யென்றான். (கஆ)

புகுமுகம் புரிதல் கண்டான் பொறிநுதல் வியர்த்தல் கண்டா, னகுநய மறைத்தல் கண்டா னன்மனச் சிதைவு கண்டான், றொகுகுழல் விரியக் கண்டான் றொடொன்று கழலக் கண்டான், றகுவன பிறவுங் கண்டான் சரமைந்து மலைப்பக்கண்டான்.

நெட்டுயிர்ப் பேறி நாயக னிலத்திடைச் சோர்ந்து வீழ்ந்தான், மட்டுமிழ் தாரி ஞளும் வணிகர்தந் திலக மானன், கட்டழ கலேக்கப் பட்ட காதனெஞ் சனங்கள வரளி, பட்டலைந் தழிய விம்மிப் பாரிடை யவச மானள். (உக)

காரண மொன்றுந் தேரார் கதுமெனச் சிவிகை யேற்றித், தாரணி மார்பி னனைச் சாரந்திடு முழை யர்காவி, யோரணி விருத்த வோங்கற கேகினர் குழு வைத தன்னைச், சீரணி பாகங் மாருஞ் செஙகையிற் றுங்கிச் சென்றார். (உஉ)

இல்லினை யடுத்த நங்கை யின்சுவை யமுதம் வே ண்டாள், வில்லுமிழ் கலன்கள் வேண்டாண் மென் மல ரணிதல் வேண்டா, ளல்லிமென் மலர்கள் பெ யத வமளியிற் றுயிலும் வேண்டாள், பல்லவ மெரி தோய்ந் தென்னப் புகட்டெழில் சாம்பி நின்றாள்()

தந்தைகண் டிதுவென் கெட்டேன் மையலுக கடு த்ததென்றே, மந்திரம் வல்லார் தம்மை மருத்துவ ர் தம்மைக் கூவிச், சுந்தரிக் கிடுக்கண் டீரச் சூழுமி னென்றா னன்னோர், சிந்தையும் வருந்தி நோக்கித் தீர்த்தில ருடைந்து போனார். (உச)

செய்யவாய் மகளைத் தந்தார் திருமூல நாத ரந்த, வையரே தீர்ப்ப தல்லா லாரிது தீர்ப்பா ரென்றே, மையறு தவத்திற் சான்ற மஞ்சுள னிருப்ப னின்றா ள், வெய்யவன் பிணியை நோக்கி வேறிது துணிந் துசெய்வாள்.

வேலனிங் குறுக வள்ளி மேவுக கட்டு விச்சி, யே லுற வுருக வென்றே யிவர்தமைக் கூவு வித்துச், சா

லமுத் திறத்தி னோர்க்குந் தரும்பொருள் பலவு மீட்டிக், கோலஞா லகத்தை யெல்லாங் கோடணை புரிய லுற்றுள். (உசு)

இந்திடத் திவர்தஞ் செய்கை யின்னண மாகக் காவி, யந்திடத் தேகச் சென்று ளருநெறி பலவு நீந்திச, சந்திர சூடன் றன்னை சந்திர குத்தன் முன்னிட், டெந்தைநின் புதல்வ னுற்ற தறிகென வியம்ப லுற்றுர். (உஎ)

கேமமா புரத்தைச் சென்று கிளர்பொருள் விலை செய் தெஞ்சுஞ், சேமமா பெருளும் விற்பத் திருத்தகு பூவா ளூரை, யாமெலா முடங்கு செல்ல வெய்தினு னிறைவர்த் தாழ்ந்தா, னுமநீர் நதியின் பாங்கர் நந்தனச் சோலை புக்கான். (உஅ)

தீஞ்சுவை யடிசி லாரச சிறந்திருந் தயின்று ளுகப், பூஞ்சினை நிழலிற் றேவன் போன்மென விருந்தா னுங்கே, யாஞ்சிறி தேனு மமத மெய்துகா ரணங்கண் டேற்றேங், காஞ்சன மனைய மேனி கருகவீழ்ந் தவமானன். (உகூ)

நந்துவ

இலகூற்றதென்னுரையென் றேமுக் குரைநந்தின், சோகம் பாவித், தற்றமி லின்ப வெள்ளத் தழுந்து மா தவரோ போலப், பற்றுவே றென்றன் மூட்டும்

பணித்திலன் செய்கை யீது, தெற்றென வறிக வெ
ன்று செங்கரங் கூப்பிச் சொன்னார். (கூ0)

தாரணிந் திலங்கு மாரிபிற் சந்திர குத்தன் றேர்
வாநூ, போரணிந் திலங்குஞ் சூலப் புண்ணியன் பா
தப் போதின், சீரணிந் திலங்கு முண்மைச் சிந்தை
ய ஞயி னச்சோ, வேரணிந் திலங்கு மேனி யிருந்
தையி னிருப்ப தென்னே. (கூக)

பித்தனிற் பெயர்த்தும் வேறும் பேசுவன் பேச்
சொன் றில்லான், பொத்திய நோயொன் றென்னிற்
பூங்கையி னடி சொல்லு, மத்தவே தாளம் பூத மண்
ணவல் விடர்செய் தெய்வக், கொத்திவை யகற்று
ம் விஞ்சைக் கொள்கைய னிவற்றிற் கஞ்சான். ()

நெட்டுயிர்ப் பெறிதலானு நினைந்தது மறைத்த
லானும், பெட்டையுங் கலையு மேய்ந்து பெயர்வன
நோக்கிப் பெய்முன், முட்டிய தென்ன மாழ்கி முக
ம்புலர்ந் திருத்த லானு, மட்டொளி யொருத்தி மெ
ய்யி னவையவந் தீட்ட லானும். (கூகூ)

எழுதுசித் திரப்பொற் பாவைக்கெனமலர் தொ
டுத்த லானும், விழுமிய கலனுந் தூசு மிகுசுவைப்
பொருளுங் காணிற், மழுவணை யிடைப்பா ளே
தன்னையு நோக்க லானுங், கழுமிய விந்நோய் மாத
ர் கடைக்கண்செய் நோயென் றோர்ந்தான். (கூச)

ஆருயிர்க் குயிரா யுள்ள வமலனே யுள்ள வாறு, தேருவ தன்றி யேனோர் தெரிவதொன் றன்றே யா னுங், காரணி கையி னும்பர்க் காரிகை யொருத்தி தன்னை, யோரணி வதுவை யாற்றி னியைப்பதே க ருமமென்றான். (௩௫)

தொன்றுதொட் டிருந்த நம்மார் சூழ்ந்தனர் வ துவை யாற்ற, லொன்றுநங் குலத்துப் பெண்மை யொருத்தியை நாடி வல்லே, சென்றனர் வருக வெ ன்று சிலர்தம்மை முறையி னேவி, நன்றுறு வினை களெல்லா நவையற முயலா நின்றான். (௩௬)

வானமர் வில்வ மூல வரதனை வழிபா டாற்றுங், கானமர் மலர்சூழ் குஞ்சிக் காளைதன் செய்கை சொ ல்லிக், கூனல்வெண் டிங்கள் வேய்ந்த கோன்மக ட் பேசுந் தூத, னமை கூறப் புக்கா னருந்தவச் சூத.மேலோன். (௩எ)

சந்திரசூடன்வழிபடுசருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-எ௪௧.

---

## மகட்பேசுசருக்கம்.

மாலு மயனு மிருபாலும் வடிவிற் கிளைந்த வுரு ந்திரன்போற், சாலு மவன்கைச் சூலம்போற் றழைத்த விலையி னாலுவில்வ, மூல மிருந்தார் தனவக

த்து முன்னி முடிந்த முடிவதனைச், சில மிருந்த மஞ்சுளன்றன் றேவிக் குரைக்கு மக்காலே. (க)

பாங்கமிருந்து கேட்டறிந்த பரிசா லதனை யுறநினைத்துக், கோங்கின் முகைகையைப் புறங்காணுங் கொங்கைக் குழுன்த யழியுயிரைத், தாங்கி யிருந்தா ளவிர்கருங்கட் சரங்கள் பாயப் பட்டவனு, நீங்கு முணர்வு சிறிதெய்த நிமலர் பாதம் வழுத்துவான். ()

விருத்த கிரியில் வீற்றிருக்கும் விமலா சமலப் பிணிதுரக்கு, நிருத்த முதல்வா பெருங்கருணை நிதியே யிளவெண் மதிசூடி, கருத்து ளழிந்து செயலழிந்து கவலைக் கடலி னறத்தாழ்ந்த, வருத்தந் துடையா யெனவிரந்து வணங்கி யிணங்கப் பழிச்சினன். (ங)

அடியார்க் கவரின் மிகவினிக்கு மமுத னிரங்கிக் கல்லாடை, பொடியார் பூதி சாதனமும் பொற்ப விருத்த ரெனத்தோன்றி, நொடிவார் வணிகக் குலமணியே நுன்னைப் பிணித்த பெரும்பிணியைக், கடிவாங் கவலைப் பெருங்கடலிற் கவிழ்ந்து கலங்கித் துளரேலே. (ச)

முன்னு மடிமை நீயின்று முளு மிடிமை யூதுள்ளோம், பின்னு மடிமை யெஞ்ஞான்றும் பெயரா

வடிமை யாட்கொள்ளூந், தன்மை யுடையோம் யா மதனாற் சவலைப் படுமோர் கருத்துடையாய், முன் னும் விழைவை யின்னினியே முடித்துத் தருவா மெனக்கிளந்தா (ரு)

பிறந்த காமப் பெரும்போகம் பேறு வார்க்கு மக்காமந், துறந்த வேட தெரிசனத்தாற் சோரா தணுகு மென்பார்போற், சிறந்த வேட வுருக்கொ ண்ட தேவர் நாதர் கழல்வணங்கி, யிறந்து படுமா ருயிர்தாங்கி யிருந்தான் வணிக ரேறனையான். (சா)

விருத்த கிரியில் வரங்கொடுத்த விமலர் பூவா ளூ ரிறைவர், வருத்தந் தணிப்ப வொருசித்த வடிவு தா ங்கித் தமக்கேற்பப், பெருத்த வயிற்றுக் குறட்பூத ம் பெயராச் சிட னெனப்போத, வருத்தி மிகு மோர் புன்னைகத் தலர்மென் னிழலில் வீற்றிருந் தார். (எ)

வழிமிக் கியங்கும் பேரிளைப்பு மாற நறுநீர் வே ட்கையுட, னழிவன் பசியு முடையார்போ லாற்ற க் காட்டிச் செழும்பைந்தேன், பொழிதண் பொ தும்பிற் புன்னைப் பூமென் னிழலி னிருந்தாரைக், ...ழிவெண் டரங்க நதிதோயக் குறித்துப் புகுமு ஞ் சுரான் கண்டான். (அ)

கையிற் பிரம்பும் வளர்தடியுங் கவினப் பிடித்து மிகுபசியா, லுய்ய வறியா னெனச்சீட னொருபா லிருப்பச் சழுங்கிவிழுஞ், செய்ய சடையர் முள்கா ந்து செறிகச் சினார்தண் பிறைவாய்க்கோல், பைய வொருகை மூலத்திற் பதித்தங் கிருந்தார் கமைப் பணிந்தான. (கூ)

வேறு.

சிறந்தொளிருங் கல்லாரத்தச் சேறாட்டும் வத்தி ரமுந் தீயிற் சேந்து, நறநதழையுஞ் சடைமுடியும் வெண்ணீறுங் கண்மணியு நீங்காப் பாதத், தறந்த ழையும் பாதுகையுஞ் சித்தர்திரு வேடமெல்லா மார நோக்கிப், பிறந்தபெரும் பத்தியினுன் மருங்க டுத்து வாய்புதைத்துப் பேச லுற்றான். (க0)

பொய்ப்படுமா ணவவிருட்குச் செங்கிரணப் பரு தியெனப் போந்த தேவே, யெய்ப்பினொடு மலர்ப் பொதும்பி னிருந்தருளல் வேண்டுவதே னீதோ வென்னின், மெய்ப்படுசே வடியாங்கே யுறுவித்து த் திருவமுது மிசைய லாகு, மிப்பொழுதே யெழு ந்தருளல் வேண்டுமென மறுவலுந்தாழ்ந் திரந்து நின்றான். (கக)

இருநதவிடந் தனைவிட்டிங் கெழுந்திருக்க வல்லே யில்லநாடித், திருந்தமுது செய்திடுமா மெவ்,

வாறு திருவமுது செய்விப் பாயேற், பொருந்தமு
து கொணர்ந்தளித்தி யெனச்சித்த ரெனப்போந்த
புராணர் கூற, வருந்தவனு மதுபுரிவ லெனவுரை
த்து விரைந்தோடி யகத்தைச் சார்ந்தான் (சஉ)

வேறு.

இன்றுநாம் பெரும்பய னெய்தி னுமலர்க்
கொன்றையா ரடியவர் குறுகி னாரவர்க்
கொன்றிய திருவமு துதவக் கைக்கொடு
நன்றுவா வெனறுநா யகிக்குக் கூறினான். (கங)

இல்லவண் முகமலர்ந் திலங்கு காஞ்சன
வில்லுமிழ் கலன்களின் மிதப்ப வேற்றுபு
வல்விரைந் துடன்செல மஞ்சு ளப்பெயர்
நல்லவன் சித்தர்மு னண்ணி னனரோ. (கச)

இந்தனை யளவுமெய்ப் போது வைகினீ
ரத்தரே பிழைபொறுத் தமுது செய்கெனப்
பத்தியி னயமொழி பகர்ந்து தன்மனை
யுத்தமி தன்னையங் கட்டென் றேவினான். (கரு)

வாய்த்தது நமக்கென மாது கையமர்
பூத்திர மனைத்துமோர் பாங்கர் வைத்தனள்
ஏத்தரு சித்தரைத் தொழுது தாழ்ந்தன
ளேத்தினை யான்மயத் திடத்தை நீவினுள். (கசு)

நீற்றினாற் கீற்றுக ணிலவ பித்தன
ரேற்றுவா மையின்விரி சுருளை யிட்டனள்
வீற்றுவீற் றுகமென் கறிமுஞ் சொன்றியு
மேற்றினாள் பருப்புமிட் டிழுதும் வாக்கினாள். ()

வறையலுந் துவையலு மற்று நெட்டிலை
நிறைவன நோக்கிய நிமலர் நீரினான்
முறையுளி புரிவன முற்று வித்தனர்
கறையறு மடிசில்கை கொடுகன் மேயினார்.

குளிர்மணி விசிறிகைக் கொண்டு கொண்கனார்
வளியெழீஇப் பணிசெய வனப்பின் மாதரா
ளளிவளர் பணிமொழி யறைந்து சித்தர்க்குக்
கனிவர வூட்டினாள் கரிசை வீட்டினாள். (கக)

தேவர்க ளமுதுணத் தீய வாலமு
மாவலொடன் றருந்திய மழிக லாப்பசி
போவது புரிந்துபுண் ணியர்க்குப் பண்ணியர்
பாவைதண் புனல்விடப் பாணி பூசினார். (௨0)

பரிகல மெடுத்தொரு பாங்கர் வைத்தன
ளரியொடு நான்முக னறிக லார்தமை
விரிமலர்த் தவிசிடை மேவ வுய்த்தன
ளுரியருக்கும் போதரன் றனக்கு மூட்டினாள்.

சுவையுள தாயினுஞ் சுவையின் றாயினு
நவையற வடிசிலை நயந்திங் கார்தலிற்

றவமுடை யேமென்க் கைதய முழ்ந்தன
ளுவகைசெய் திருந்தன ரொருவர் நேரிலா.(உஉ)

எய்ப்பொரு காலத்து மெய்து முதவ
ரெய்ப்புயி ரனைத்திற்கு மிறுக்கு நாதரோ
ரெய்ப்புடை யவரென விருந்தங் கன்பர்மு
னெய்ப்பொழிற் றயர்வுயிர்த் தினிது வைகினர். ()

திருவுள மகிழ்பெறுஞ் செவ்வி நோக்கியல்
விருளறு திருவடி யிறைஞ்சி மஞ்சுளன்
பெருமநும் பதியெது பெயர்ந்து வந்திடுங்
கருமமென் னருளெனக் கனிவின் வேண்டினன்.()

விழுத்தகு மஞ்சுளன் வினவி நிற்றலும்
வழுத்தபச் சித்தராய் வந்து வைகிய
வெழுத்தினு ளகரமே யென்ன வெங்கணு
முழுத்துணர் சிவபிரான் மொழிதன் மேயினர். ()

வேறு.

திருத்தகுபல் பதிகளினுஞ் சென்றுபயின் றிருந்தருளு, மருத்திமிகுஞ் சித்துடையே மாயினுமிப் பதியேபோல், விருத்தகிரி யெமக்கினிமை மிகவிளைக்கும் பதியாகும், வருத்தமில்சந் திரகுத்த னப்பதியி வதிகின்றான். (உ-கூ)

ஆக்கத்தின் மிகப்பெரிய னதுநீயுங் கேட்டிருத்தி, போக்கற்ற வவன்செவியிற் புகையறுமந் திர

மோதித், தேக்குற்ற சுகக்கடலிற் செறிவிக்கும் குருநாமே, தூக்குற்ற புகழாற்குத் தோன்றினன் சந்திரசூடன். (உஎ)

கல்வியிருப் பணிக்கோமான் கலக்கமுறுங் காளையவன், செல்வமிக வீட்டுதலாற் றெருமருமூல் வடைதிசைக்கோ, னல்வனப்பான் மதனழியு நற்கொடையாற், றிருப்பணிக்குஞ், சொல்வரையாற் றுளக்கமுறுந் துகளிலரிச் சந்திரனே. (உஅ)

அனையவன்பல் பொருளீட்ட வணிகிளரிப் பூவாரூர், முனையாருநா ளடுத்தவனிம் மொய்ம்மலர்ச்சோ லையினிருந்தான், றனேநகாநன் மகள்குமுதை தன்னியல்பா னடுத்தவளை, விலைவலியாற் காதலித்தான் விளங்கிழையுங் காதலித்தாள். (உகூ)

காமவே ளிருவோர்க்குங் கடிமலர்வா ளிகஞேர்த்தா, ஞெமதூ மத்தொழுக்கா லும்பர்நாட் டினையளக்குஞ், சேமமார் விருத்தகிரி சேர்ந்தனன்சந்திரசூடன், றமமார் குழற்குமுதை சார்ந்தனணின் மனையன்றே. (௩0)

அன்றுமுத லின்றளவு மயலறியூக் காமகுன்றியுளந் தளர்ந்தழிந்து கவலைநெடுங் கடற்க்கார். நன்றவர்தம் மனக்கருத்தை நாமறிந்து யா

தலினுன், மன்றல்புரி விம்பதற்கே வழிநடந்தன் மருங்கடுத்தாம் (ஙச)

சுற்றமொடு பொருளாதி யவன்றினர்க்கு மகட் கொடுப்பிற், பொற்றதம னியப்பணியிற் புணர்த்து மணி போல்விளங்கு, மற்றடுத்த வூழாலு மஞ்சுள சந்திரசூடம், குற்றவெழிற் குமுதையைநீ யுதவுவதே கடனென்றூர். (ஙஉ)

வள்ளலார் மணிவார்த்தை கேட்டுவந்து மஞ்சுளன்று, ளுள்ளவா றுரைசெய்தீ ரும்மதுதிரு வுளக் குறிப்பைத், தள்ளுமா றெனக்கில்லை தையல்பிணி யினளதுதீர்ந், தெள்ளறீர்ந் தேயன்றே வெழின் மணஞ்செய் குவதென்றான். (ஙங)

மற்றதற்கு நீவெருவேல் வம்மெனக்கொண் டுடனேகிப், பொற்றமனை யகம்புகுந்து பூங்கொடியி னுடன்முழுதும், பற்றலர்கள் புரம்பொடித்தார் பங்கயக்கை யால்வருடி, யுற்றபிணி யொழிவித்தா ருலகமெல்லா மதிசயிப்ப. (ஙச)

பிணிமுழுதுங் கையகலப் பெண்ணரசி யுடல்குளிர்ந்து, தணிவில்பெரும பணிதுரந்து தவவேடத் திருந்தார், துணிமதிவேய்ந் தருள்கொழிக்குஞ் சோதியல திலையென்று, வணிமலர்ச்சே வடித்துணையி னலர்மாலை போம்பணிந்தாள். (ஙரு)

வணங்கியமா தினை நோக்கி வருஞ்சித்தர் மூறுவ
லித்து, மணங்கிளர்பூங் குழலாயுன் மனக்கருத்தை
யறிகின்ற, முணங்கலையென் மதணியே யுன்கருத்
தினி முடிப்பாமென், றிணங்கமொழிந் தனரேகியெ
ழின்மலர்ப்புன் னையினிருந்தார். (நசு)

வேறு.

இருந்த சித்த வெழிலுருச் செம்மலார்
திருந்து தம்மலர்ச் சேவடி யேத்திடும்
வருந்து ருத்தவ மஞ்சுளம் கோர்நலம்
பொருந்து மாறு புகலுதன் மேயினார். (நஎ)

விருத்த வோங்கலு மேதகு பல்பொருள்
பொருத்து மித்தகு புன்னையஞ் சூழலுந்
திருத்த முத்தா நதியுந் திருவெலா
மருத்தும் பற்குனி யாறுமொன் றுமரோ. (நஅ)

பற்கு வென்றல் சிறுமை பகர்வது
பிற்க ணீயெனும் பேரடை விப்பது
பற்கு பாவந் தனக்கடை வித்தலிற்
பழகு னீயெனப் பட்டதிப் பூநதி. (நக)

என்ன பாவ மியற்றினும் பற்குனி
தன்னி லாடிற் றவிர்க்குமிம் மாநகர்
முன்னு நாதன் மலரடி தாழ்கலார்க்
கென்ன லேல்லளர் விக்குமென் நாளுமே. (சO)

கோயி னூக்குக் குறித்த பொருள்களை
வாயி லல்வழங் கெலென்று கூறினுந்
தீய தேயய னுய்வருஞ் செல்லுமித்
தோய மூாடினு மப்பயன் சேருமோ. (௩க)

மார னைப்பொடித் தார்க்கு வழங்கிட
நேரு மொண்பொரு ணீட்டில ராயிடிற்
றூர முந்தகு சுற்றமுஞ் செல்வமுந்
தீர வைய்ந் தெருத்தொறு மேற்பரே.

கழுதொ டாடிய கண்ணுத லொண்பொருள்
விழுமி தென்று மிசைந்தன ரசயிடி
னெழுபி றப்பு மினத்தொடு கும்பியின்
முழுகு வார்சமன் றூதர்கண் மொத்தவே. (௩௩)

அன்பி னலரன் சேவடி போற்றியே
யைம்பொ னிர்வளர் பற்குனி தோய்ந்தவர்க்
கின்பெ லாமுறு மெண்ணமெ லாமுறுந்
துன்பெ லாமறுந் தோமறு நாளுமே. (௩௪)

கங்கை யாடினுங் காசி வதியினும்
பொங்கு காவிரிப் பூம்புன லாடினு
மெங்கு மாடினு மெங்கு மிருப்பினு
[illegible]ம் மோவரன் மாட்டிழை வஞ்சமே (௩௫)

வேந்த னல்விழை யப்படி னல்லதங்
காய்ந்தி டாதயு லோர்க்கிழை குற்றமுங்

தேய்ந்தி டாதவற் கேபிழை செய்திடிற்
காய்ந்தி டாதுகண் ணோட்ட மமைவருமோ. (சசு)

அண்ண லால்விழை யபபடி னல்லது
பண்ணு மாருயிர்ப் பாவமும் பாறுறு
கண்ணு மூன்றுடை யான்கழற் கேபிழை
நண்ணி னுய்தலெந் நாட்டினு மில்லையே. (சஎ)

ஆத லாலற மாதிகள் வேண்டியுந்
தீதெ லாஞ்சிதை விப்பது வேண்டியு
நீதி யாலிந் நெடுநகர் வைகினும்
போது சேர்பற் குனிப்புன லாடினும் (சஅ)

சிறந்து வைகுந் திருமூல நாதர்பான்
மறந்து மோர்பிழை யும்மரு வாவகை
நிறைந்த பத்தியி னொனறிச் செல்லுவார்
பிறந்து வந்த பயன்பெறும் பெற்றியோர். (சகூ)

வேறு.

மஞ்சுளா வத்தகைய மணிகண்டர் திருவடிக்கு, நெஞ்சமா தியிற்பிழையா நெறியுடையை யாயீங் கே, யெஞ்சுறு திருத்தெறிநீர்ப் பற்குனியா டியதிற த்தால், விஞ்சவே வரும்பயன்கண் மேல்விளங்கக் கூறண்டியால்.

பாணித்த வினியமையும் பற்குனியி னீராடி, யா ணிப்பொன் மணியகத்தை யடுத்தடிசி லயிலென்று

ர், சேணுற்ற பெருமபுகழரன் றிருமுகத்தா மரை மலர்ந்து, பூணுமற விதியாற்றுற் பொங்குபுன னதி படிந்தான (ருக)

சோராத கதியருளுஞ் சோமாக்கந் தரைப்பாங் கர்த், தீராது சேவித்துச் சனகர்முத லோர்செறிய க், கூரார்ந்த படைப்பூதக் குழுநெருங்க மனத்தெ ண்ணி, யாராத காதலினு லகமிருடம் புடிந்திட் டான். (ருஉ)

உள்ளமுறத் தியானித்த வுறுபொருளின் சொரூ பமாய்க், கள்ளொழுகு மலர்ப்புன்னைக் கடிநிழலில் வீற்றிருந்த, வள்ளலவர் தமைக்காட்ட வளர்புன ன்மேற் றலைநிமிர்த்தா, னெள்ளலற வருஞ்சித்த ரொருவரையே யெதிர்கண்டான். (ருங)

மீட்டுமிரும் புனன்முழுகி மிக்கதியா னத்திருந் தான், மீட்டுமலர்ப் புன்னைநிழல் வீற்றிருந்தார் மு ன்போலக், காட்டுதலு மிங்கிருந்தார் கண்ணுதலா ரெனவவர்தங் தாட்டலங்கைத் தலம்பற்றித் தக்க வலங் கொளசசார்வான். (ருச)

உடன்விரைந்துபுனனீங்கி வார்கரையெக் கரிதேற டிக், கல்வரைந்த திணிதோளான் கடிமலர்ப்புன் னையினிருந்தார், சொல்லவொணுத மலர்ப்பாதக் து

னைக்கையிற்பற் றிடத்தாழ்ந்தான், கொல்வுரைந்த
திரிசூலக் கூத்தர்மறைந் தருளினார். (ருரு)

புன்னாகத் தடியிமையோர் போற்றிசைப்ப வீற்றி
ருந்த, கொன்னாகத் திரிபோத்தார் குலமுதிவில்
வத்தடியிற், றொன்னாகத் தவர்போற்றத் துன்னினார்
மஞ்சுளன்று, மன்னாகத் தவிர்மணிகை நழுவினர்
போலாயினான். (ருசு)

அலமருமெண் டிசையோடு மையரே வருகவெ
ன, நிலமிசைப்பன் முறைவணங்கு நெட்டுயிர்க்கும்
பொழின்முழுதுஞ், சுலவுறும்வா னமுதுப்பத் தூ
நீரென் றேமதித்த, புலனுடையே னாயினேனென
ன்கரத்தான் முகம்புடைக்கும். (ருஎ)

அடியற்ற மரம்போல வவனிவிழ மிகப்புரளுங்,
கடிசுற்ற மலர்ப்புன்னைக் காமர்மரத் தினைச்சூழும்,
வடிவுற்ற வருட்சித்தர் வார்மலர்ச்சே வடிச்சுவட்
டின், பொடியொற்றித் துடன்முழுதும் பொழிவி
ழிமா ரியினனைப்பான். (ருஅ)

இவ்வாறு மஞ்சுளனங் கனைநதழுபுரு செயல்கே
ட்டுச், செவ்வாய்மைப் பெருஞ்சுற்றத் திரளினரெ
ல்லாமேகி, யொவ்வாத புகழாய்சிவ் குற்ற
னுரையென்று, ரவ்வாயின் மொழிபெரு ரவனையு
ன் கொடுபோந்தார். (ருகூ)

பொன்மனேயி னகத்திருத்திப் புரோகிதனே வர வழைத்து, நன்மதியைக் கூர்த்தறியு நான்மறை யோய் மஞ்சுளன்றன, றனமதியின் வேறாகித் தள ர்ந்துதெரு மருகின்றா, ளென்மதிக் கென்னுரைத் தாரெல்லாருங் கைதொழுதே. (கூ0)

அறிவுறக்கும் புரோகிதன்மெய் யன்பன்முக மலர்நோக்கி, நெறியுளியுச சியினியற்று நித்தியகன் மமுங்காணேஞ், செறிபிணியு நின்மகட்குத் தீர்ந்த தென வேகேட்டா, மறிவதெவ னெவற்றிற்கும் வா ய்மையே யுரையென்றன். (கூக)

உரையென்ற புரோகிதன்மு னூற்றிருந்து விழி ப்புனல்கள், கரைவென்ற நதிபோற்க் கடிமார்பத் திடையொழுக,வரைவென்ற வெண்டோளார் வந் தபடி யுரைத்தபடி,தரையொன்றி யிருந்தபடி மறை ந்தபடி சாற்றினன். (கூஉ)

கேட்டுளத்தி லதிசயித்துக் கிளேஞரொலா மச்ச முடன், கோட்டமிலா மஞ்சுளனைக் கும்பிட்டுப் பணிந்தெழுந்தார், நீட்டரிய புகழானைத் தெண்ணீ ரென் றமிழ்துணினும், வேட்டபய னின்றமோ வெதுக்தெளிந்தான் விப்பிரர்கோன். (கூ௩)

செய்யசடை யரற்கன்பு செயவமுது பணிமாற, வெய்யவுருப் பிணியையர் மென்கையிழ்றை வந்

தொழிப்ப, மையறுமஞ் சுளன்காந்தி மதிகுமுதை மூவருமுன், பொய்யிறவு மென்புரிந்தா ரென்வெவ ரும் புகழ்ந்தனரால். (சுச)

கல்யாண சிகரதத்திற் கலந்திருந்தார் மகடபேசு ங், கல்யாணம் வளாகாதை சுட்டுரைத்துச் சூதமு னி, பல்யாணர்க் கதைகேட்கும் பரிசினர்முன் மஞ் சுளன்பி, னல்யாணர்ச் சிவபூசை நயந்தபடி விய ந்துரைப்பான். (சுரு)

மகடபேசு சருக்க முற்றிற்று

ஆகத்திருவிருத்தம்-அ0சு.

---

## சிவபூசைச்சருக்கம்.

தேசிகன் றெருட்டலுந் தெளிந்து மஞ்சுளன்
கூசியின் றவனெதிர் கூறன் மேயினு
னீசனென் றவத்தினுக் கிரங்கு மேயெனிற்
பேசுவ தென்னவே றுருவம் பேணுமோ. (உ)

தன்னிய லுருவினைத் தகுந்தி யானத்தின்
மன்னிடக் காட்டிய வரதன் கைகளாற்
றொன்னடித் தாமரை பொதியப் பூக்குழி
மன்னிய மாக்கியங் கன்று போதுமோ. (உ)

தவத்துறை முற்றிடாத் தமிய னிங்கிருந்
தவத்துறை முற்றுவ தன்றி யாழ்கடற்
பவத்துறை பாழ்படப் பரம ஞானத்தாற்
சிவத்துறை முற்றலுஞ் சிவனு மேகொலாம். (௩)

கன்னலின் களிதெரி களிறு போலவே
முன்னுற வருடர முன்னும் வேடமே
நன்னலப் பொருளென நாடி டாதுவே
றின்னுமுண் டெனவிகந் தேனு மய்வலோ. (௪)

அடியவ ருள்ளமே யாலெ யங்களும்
வடிதரா மேனியு மற்றுங் காண்கெனத்
துடியணி கரத்தவர் தோன்றுந் தொண்டர்தம்
படிவமுற் றிடுதவப் பரிசுந் தேர்கிலேன். (௫)

மன்றல்செய் கூவிள மரத்து நீழலி
லொன்றியநாதரே யொருமைச் சித்தரா
யின்றெழுந் தருளியு மெண்ண முண்டெனி
னன்றுநன் றிருத்தலி னசித்த னன்றென்றான். (௬)

குறைநிறை யுளத்தொடு குழைந்து கூறிய
நிறைதவ மஞ்சுள னிலைமை நோக்குபு
மறையவர் திலகனாய் வந்த தேசிகன்
கறையறு முறுதிகட் டுரைக்கன் மேயினான் (௭)

பொழிப்பு

மஞ்சுளனவ் வுடல்வாழ்க்கை மாற்றுவதே பயன்போல மதித்துச் சொன்னாய், நஞ்சுயிழுட் டுள

யெயிற்று நாகமுரிபல்காலு நழுவச் செய்தும், விஞ்சவுரி மேன்மேலு முறுவதுகண் டூலைபோலும் வினைநேராக, வெஞ்சலிலாச் சிவஞானத் தேகனிலொன் றுமளவு மெய்துங் காயம். (அ)

இந்தவுட லழிந்ததற்பி னிதற்குமே லாமுடல மெய்து மேயோ, பந்தமுறும் பிணிவறுமை பாவமிகு மிழிவுடலம் பற்று மேயோ, முந்தவினை யாதாக முடித்திடுமோ யாரறிவார் முதல்வர்ப் போற்ற, வந்வுட லேநமக்குப் பயப்படுவ திதிலியற்று மராபொன் றுண்டால். (கூ)

அம்மரபி யாதெனிற்கே ளகண்டசச்சி தானந்தவிகள மான, செம்மலினி திருந்தருளுஞ் சிவலிங்கத் தருச்சனையே செய்த லாகும், விம்முறுநோய் பழிபாவ முதலான வாட்டமெலாம் விலைவி னீக்கு, மெம்மையில்வேண் டியவிட்ட மெனைத்தினையும் வான்கதியோ டியா நிற்கும். (க0)

வாய்மையறி வாசார முபசாரம் வந்தித்தல் வணங்கல் சீலந், தூய்மையரு ளன்படக்க மொழுக்கமுழுக் காறுமை துறவு நன்றி, யாய்மனத்திற் பொறுமைதவந் தானமுத லறங்களெலா மூற்று வேணுந், தேய்மதிய முடிக்கணிந்த சிவபெருமான் பூசனையே செய்தல் வேண்டும். (கக)

அந்தரத்தி னின்மயார்க ளரம்பையர்பூ ணணிமு
லைக ளாகந் தோய்ச், சிந்தைமகிழ்ந் திடும்வாழ்வுந்
தினகரன்வல் லிருளொழுங்குந் திறமுஞ் சீதச், சந்
திரன்பைங் கூழ்வளர்க்குந் தருமமுமிந் திரன்மல
ரோன் சங்க மேந்தி, பந்தமுறு மதிகாரம் பலவுமி
றை பூசனைசெய் பயனேயன்றே. (கஉ)

தீர்த்தமா டுதல்சாந்தி விரதமுதற் றானங்கள்
செய்த லங்கி, யார்த்துமா தவம்புரித லாச்சிரமத்
தெய்தலிவை யாற்றி னோரும், வேர்த்திட்டா வுடல
மா ருலகிடைச்சென் றிமைப்பளவின் மீள்வர் நூ
லி, னோர்த்தநீள் சரியைமுத லுஞற்றினர்சா லோ
காதி யுற்று மீளார். (கஙு)

ஆதலாற் குறைதீர வருள்பெறுதல் வேண்டுமெ
னி லன்பர் வில்வச், சீதநீ ழலிலிருக்குந் திருமூல
நாதரொரு சித்த ராகிக், காதலா லமர்ந்துழியே
சிவலிங்க பூசனைகைக் கொள்க வென்றான், போது
வா யெனவடுத்தோர் றுடன்கொண்டு போந்தனரப்
புன்னை வாயில். (கச)

வேறு.

த்திய நாளை நான்கு நிகழ்த்திமென மலர்கள்
கொய்து, கொத்தலர் புன்னை நீழற் குழகனை ருடுத
தா பித்துச், சுத்திசெய் யிடத்தி னெல்லாப் பொரு

ள்களுந் தொகுத்து வைத்துப், பத்திசெய், மஞ்சு ளன்றான் பண்பொடும் பூசை செய்வான். (கரு)

பூதமா திகளோ ரைந்தும் பொற்புறச் சுத்தி செய்து, ஆதன மூர்த்தி மூர்த்தி மானையு மமர வெண்ணிப், போதவிழ் மலர்கள் சாத்திப் பூம்புகையொளிமுன் காட்டிச், சீதள வெண்ணெ யாதி திருவுருக் குளிர வாட்டி. (கசா)

விழைதகு மணிப்பொன் மேனி விரவிய வீர மாற்றித், தழையொளிப் பட்டுச் சாத்தித் தமனியந் தகர்த்த சுண்ணங், குழைவிரைக் கலவைச் செச்சை கொட்டிமே லட்டிச் செந்தேன், மழையெனத் துளிக்கு மாலை வயங்கணி பலவுஞ் சாத்தி. (கஎ)

அறுசுவை யமுத நான்கு மாடகக் கலத்தி னூட்டி, நறுவிரைப் புகையி னோடு நகையொளி பலவுஞ் சுற்றி, மறுவில்கண் ணாடி காட்டி மதிக்குடை கவித்து மற்று, முறைமுறை பூசை முற்ற வுஞற்றினன் மனையைச் சார்ந்தான். (கஅ)

சுற்றமுந் தானு மொன்றாய்த் துவனறியில் லகத்துள், வைகிப், பற்றற வந்த சித்தர் பரிகலச் சேட முண்ணுண், டற்றமில் சுவையி னுண்டி பயின்றனளாவி யன்பன், மற்றைய நாளும் பூசை வயக்கு வான் மகிழ்த்து நின்றான். (கக)

மாதவத் தலைமை சான்றீர் மஞ்சுளன் பூசை யாற்று, நீதியை யெடுத்துச் சொற்ற நேரிழைக் குமுதை மன்ற, லாதர வோடிஞ் சோறு மறிகவென் றறிஞர் கேட்பச், சூதநன் முனிவன் கூறத் தொடங்கினன் மடங்க லோட. (உ0)

சிவபூசைச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அஉசு.

---

## கல்யாணச்சருக்கம்.

அன்னை யாயுல கனைத்திற்கு மப்பனு யிருந்தே, யென்னை யாண்டுகொண் டருளிய விறைவனு ருருவம், புன்னை நீழலிற் பூசித்துப் போனக மயின்ற, தன்னை நேர்வரு மஞ்சுளன் றமரொடு மெழுந்தான். (க)

சுத்த கூவிள நீழலிற் சுரரெலாம் போற்று, மத்த னார்தமை யடுத்தன னிறைஞ்சின னறைவான், பத்தி யேதுமி லேனையும் பணித்திட விரங்கிச், சித்த ராயெழுந் தருளினன் சிவபெரு மானே. (உ)

ஆய்ந்த சந்திர குத்தனு ரருந்தவத் துயிர்த்த, வாய்ந்த சந்திர சூடற்கு மஞ்சுள னடியேன், சாய்ந்த மெல்லிடைக் குமுதையைத் தழன்முனர்க்

கொடுப்ப, நேர்ந்து ளேனென வுரைத்தன 'னின்றெலாங் கேட்ப. (ந)

முடங்க நீட்டினன் முனனுகவெனப்புரோகிதனார், தடங்கை நீட்டினன் விடுத்தனன் சார்ந்தனன் முனியின், மடங்கு முவெழின் மன்றன்மண்பமொன்று வகுத்தா, னடங்க வான்பொருளனைத்தையு மீட்டுவா னுன்.

(ச)

மன்றல் செய்வினைக் காம்பொருண் மஞ்சுள னீட்டி, நன்று வைகினனுகநற் சந்திர குத்தற், கொன்றிருங்கன வத்திடை யுமிழ்மலர்த் தேறற், கொன்றை யந்தொடைக் குழகனார் குறுகினருரைப்பார். (ரு)

கேழில் சந்திர சூடற்குக் கெழுமுபூ வாளுர், வாழு மஞ்சுளன் மகட்கொடை நேர்ந்திடும் வண்ணம், பாழி வையகத் தவரெலாங் காணவே படர்ந்து, சூழி ருங்கொடிற் றாதுரைத் தடுத்தனந் துனைந்தே (சு)

மங்கலச்செழு முடங்கலும வைகுறு காலை, யிங்க ணேகிலர் கொண்டுவந் திருவர் காணென், றிங்கணங்கண மருளினர் கரத்தலு மாங்கே, தங்கு சந்திர குத்தனுந் தடங்கண் விண் டெழுந்தான். (எ)

கண்ட தோர்கன வத்தினை நனவெனக் கருதி, ய
ண்டர் நாயகன் கருணையை யன்பினுற் போற்றி, ம
ண்டு தீம்புனல் காலையி ளூடிமா சனைத்தும், வின்
டு போமரு நாட்கடன் விதியுளி யியற்றி. (அ)

உரிய ராகிய கிளைஞரை யழைத்துமை யொருபா
ற், பிரிவி லாதவர் பேணுவே டத்தொடு மடுத்து,
விரிய வோதிய பெரும்பொரு ளிதுவென வியந்து,
தெரிய வோதின னிருந்தனன் செவ்விமற் றதனில்.

வே று.

மங்கல முடங்கல் கொண்டு மருங்கெலா முழை
யர் சூழப், பொங்கிய வியாழச் சூழ்ச்சிப் புரோகித
னடுத்து வைகித், தங்கிய நாய்கன் செய்ய தடங்க
ர நீட்ட வாங்கி, யங்கவன் சுருளி னீக்கி யரும்பொ
ரு ளினிது தேர்ந்தான். (கo)

உழையிருந் தவர்க்குங் கூறி யொளிர்மணிக் கல
னுந் துகும், விழைதக முடங்க லுய்த்த வேதியன்
முதலா னோர்க்கு, மழையெனச் சொரிந்து நாளை வ
ருதுமுன் செல்க வென்று, தழைதரு விருப்பிற்
போக்கிச் சந்திர குத்தன் பின்னர். (கக)

விரைவுசெய் தொழின்மைக் கேற்ற வண்பொரு
ள் பலவுந் தாங்கி, விரைசெலற் கலினப் பாய்மா
வேழமுந் தேரும் பண்ணி, யரையர்க ளாதி யான

வனைவரு முடங்கு சாரத்; தரைபுகழ் மகனைக் கொண்டு தகுதியின் வெளிக்கொண் டானால். (கஉ)

பல்வகை நெறியி னீங்காப் பண்ணவர் தொழுது போற்றும், வில்வநற் கானஞ் சூழ்ந்து மேகும் பூவா ளூரி, னெல்லையை யடுத்தான் முன்ன ரெய்திய தூதர் சொல்ல, வல்விரைந் தெதிரே சென்றான் மஞ்சுளன் வரிசை யோடும். (கங)

உரிமையி னளவ ளாவி யுற்றவர் தம்மை யெல்லாம், பரிசனத் தோடுங் கொண்டு பதிவயிற் புகுந்து பொன்னால், விரியொளி மணியாற் செய்த விசித்திர மனைக ணல்கிப், புரிவுறு மகிழ்ச்சி தோன்றப் பொற்புடன் விருந்து செய்தான். (கச)

திருந்திரு சுற்றத் தோடுந் திருமூல நாதர் முன்போ,யருந்துதி யெடுத்துப் போற்றி யருச்சனை யாற்று வித்து, முருந்துறழ் முறுவ லாட்கு முழவுறழ் தோளி னாற்கும், பொருந்துற முகூர்த்தம் வைத்துப் போந்தனன் மனையின் மீண்டு. (கரு)

சந்திர சூடம் காகச் சந்திர சூடர் தீரமே,வந்தொரு சித்த ராகி மகட்கொடை நேர்வித் தாரென், றந்தரன் மன்றல் காண வகிலத்தி லுள்ளோ ரியாருஞ், சிந்தையின் மகிழ்ச்சி பொங்கச் சேர்ந்தனர் பூவாளூரின் (கசு)

சித்தராய் வந்து நங்க டிருமூல நாதர் தாமே, கைத்தல மலரான் மெய்யிற் கதுவிய வருத்தந் தீர்த்த, வுத்தமி குமுதை மன்ற லூறுந்தின மடுத்த தென்று, தத்த-மக் கெய்தி னுற்போற் சகலரும் வினையின் மூண்டார். (கஎ)

வீதிக டிருத்து வாரும் வீதியின் புழுதி மாய்ச், சீதளப் பனிநீர் வாங்கிச் சிவிறியிற் றாவு வாருந், தாதவிழ் மலருஞ் செய்ய தமனியப் பொடியுஞ் சிந்திப், பூதல மன்றி தென்னப் புத்தெழி லுறுத்து வாரும்.

காவணம் வீதி தோறுங் கவினுற விழைக்கின் றாரு, மேவரு துகிலாற் பட்டால் விதானங்கள் புரிகின் றாரு, மோவியந் தீட்டு வாரு மொளிமணிப் பாவை யோடு, பூவமர் நிறைநீர்க் கும்பம் பொற்புற விருத்து வாரும். (கக)

அந்தரத் தகடு தார்த்த வயிர்மணி மாட மேடை, சுந்தரம் விளங்கித் தோன்றச் சுதைமிகத் தீற்று வாருங், கொங்தொளி மணியிற் செய்த கோவைக டேக்கு வாருஞ், சந்தமென் மலரிற் செய்த தார்பல நாற்று வாரும். (உ0)

வரியில்க டோறு மிட்ட வான்மணிப் பந்த ரோறுங், கமுகொடு நெடிய வாழை கமுகொடு யாக்கின் றாருங், கோயில்க டோறுஞ் செம்பொற் கோபுரந் தோ

றுஞ் சூழ்ந்த, ஞாயில்கடோறுஞ் சால நர்கொடி யெடுகின் றாரும். (உ௧)

ஓதனத் தொடுசிற் றுண்டி வழிஞருக் குதவு வா ருஞ், சீதளப் புதுப்பூம பந்தர்த் திம்புனல் வாகரு வாரும், போதவிழ் தொடையுஞ் சந்தும் பொலங் கலத் திரளும் பொன்னுங், கோதறு மணியு மற்றுங் கொண்டின் வழங்கு வாரும். (உஉ)

அடியவர் பூசை யாற்றி யமுதுநன் கருத்து வாரு ம், படியறு குரவன் பாதம் பத்தியின் வணங்கு வா ருங், கடியவிழ் கொன்றை மாலைக் கண்ணுதல் பூசை யாற்றி, நடலைக ளறுக்கின் றாரு மாயினர் நகரின் மாந்தர். (உ௩)

வருபுன லாடிச் சேர்ந்தும் வார்பொழி லுகர்ந்து ஞ் செம்பொற், றிருவியல் சிவிகை யூர்ந்துந் தேரொ டு பரிமா வூர்ந்தும், பருமவல் விலங்கை யூர்ந்தும் பகர்சது ரஙகஞ் சூது, பொருதும்வன் றகர்கள் சே வல் போரிடைப் பொருத்தி வென்றும். (உ௪)

மாடகத் திவவு நல்யாழ் வார்நரம் பிசைகள் கே ட்டுஞ், சூடகத் தளிர்க்கை மாதர் சுவையுறழ் பாட ல் கேட்டு, மாடகப் பாட கக்கா லணங்கனா ரரங்கி லாடு, நாடகத் தினிமை பார்த்து நண்ணினர் மகி ழ்ச்சி பூத்தார். (உ௫)

வேறு.

இன்னணந் திருநக ரெழிலு மின்பமு
மன்னிட மணஞ்செயும் வைக லும்வரத்
தன்னிகர் சந்திர சூடன் றன்மகிழ்ந்
துன்னினன் சிவபிரா னொளிர்பொற் சேவடி(௨௬)

ஆடினன் புதுப்புன லணிய ணிந்தனன்
பாடினர் மங்கலம் பாவை யன்னவர்
கூடியின் னியம்பின கோல வின்னிய
மோடைமின் னியநுத லுவாவி னேறினான். (௨௭)

மதிக்குடை நிழல்செய மருங்குசாமரை
விதுக்குறை நுதலினர் வீச விண்ணவர்
பதிக்கொரு நாயகன் படர்ந்திட் டாலென
முதுக்குறை யுடையவன் வீதி முன்னினான்(௨௮)

இந்திர னரசுவீற் றிருக்கும் வான்சபை
வந்திருந் தனையகல் யாண மண்டப
முந்துற வடுத்தனன் முரச மார்த்திடத்
தந்தியி னிறங்கிமண் டபத்துட் சார்ந்தனன்.(௨௯)

இருந்தனன் றவிசிடை யெவரு மீண்டினார்
திருந்தெழிற் பேரணிச் செல்வக் கன்னியை
வருந்தலின் மஞ்சுளன் வாச நீரொடு
பொருந்துற வளித்தனன் புலவர் போற்றவே(௩0)

சந்திர சூடனற் றையல்கைப்பிடித்
தந்தணர் விதிப்படி வளர்த்த வஙகிமுன்
மந்திரம் புகன்றுமாங் கலிய மாதராள்
கந்தரத் தனைவருங் கரிணை யாத்தனன். (௯௧)

வேறு.

பஞ்ச துந்துமி முழக்கெழப் பண்ணவர் சூழக்
கொஞ்சுபைங்கிளிக் குங்கும தனசவுந் தரியோ
டஞ்செ ழுத்துரு வாகிய வண்ணலார் விசும்பி
னெஞ்சு றுமகிழ் வாலினி தெழுந்தரு ளினரால். ()

கருணை நாயகன் றுந்துறக் கயிலையில் வளர்த்த,
பொருவி லாவெழிற் குழுதையைப் புணர்த்துறு ம
ன்றற், றிருவெ லாமுற நோக்கினர் திருவுள மகிழ்ந்
தா, ரருளி ஞயகன் வரவினை யனைவருங் கண்டார்()

மறையின் வல்லவர் மஞ்சுளன் றனமா வழஙகு,
நிறையொன் ஞற்றுகி லாதியான் மலர்ந்தநெஞ் சக
த்தைப், பிறையி லங்கிய முடியினர் பிறங்கெழி லு
ருவிற், குறையு ளாக்கிஞ ரீவங்தெழுக் தாடினர் ப
ணிந்தார். (௯௪)

வேநத ராதுயோ ரனைவரும் விண்ணிடைத் தோ
ன்றுங், காந்தி வான்மதி மிலைத்தவர் கழலினை வண
ங்கிப். பூந்தண் கோதையின் வெதுவைகா ணியபுகு

ந் தேமுங், கேந்த லர்திருக் காட்சிதந் தனரெனத் துதித்தார். (௩௫)

கஞ்ச ஞானன் காளூருறீ கருணைநா யகனு, மஞ்சி லோரியுங் காட்சிதந் தருளிய வாற்றாற், றுஞ்சு மாமலந் துடைத்தன மெனப்பல துதித்து, நெஞ்சி னைகையி னின்றனர் மஞ்சுளன் முதலோர்.

எந்த வாவிக்கு மிருமுது குரவரா யிருக்கு, மந்த நாதனை யம்மையைக் கயிலையிற் பண்டே, தந்தை தாயென வடுத்திடுங் குமுதைதன் னுயிராய், வந்த நாயகன் றனனொடு வணங்கினள் மகிழ்ந்தாள். ()

ஆதி நாயகர் திருமூல நாயக ரடுக்கன், மாது நாயகர் மன்றலிற் போந்தவர்க் கெல்லாம், போத வாரருள் புரிந்தனர் மறைந்துபூ வாளூர்க், கோதி லாத கூ விளநிழல் குலாவிலீற் றிருந்தார். (௩௮)

சிறந்த மன்றலிற் செய்வினை முற்றுறப் புரிந்திட், டறந்த வாதசிர்ச் சந்திர சூடனு ரணங்கோ, டுறைந்து ளார்தமை வணங்கின னுவந்துமஞ் சுளன்ற, னிறந்த வாக்கனி பாகடை நிரப்பின னெவர்க்குமடி (௩௯)

பிணியு விழ்ந்தபூத் தொங்கலும் பெருமணச் சாந்து, மணியு மாடையுமளவில கொண்டுமஞ் சுள

னுந், தணிவில் சந்திர சூத்தனுஞ் சார்ந்தவ ரெவர்க்கும், பணிவி லேறுடுற விசினர் பரிவுதீர்ந்தனரால்.

முரசு பேரிகை தண்ணுமை மொந்தையே காளம், விரசு தாரையின் சின்னமும் வேறுவே றியம்பத், தரைசெய் மாதவ மனையவன், சந்திர சூடன், பிரசை மால்களி றிவர்ந்தனன் பூவைதன் னேடும்.

நெடிய வீதியிற் பரத்தையர் நிரந்தரித் தாடத், தொடிவி ராவிய கரத்தினா ரரக்குநீர் சுழற்றப், படிவி ராவிய வனைவரும் பாங்குறச் சூழக், கொடிவி ராவிய திருநகர் சூலாய்வலம் வருவான். (சஉ)

கருத்து முற்றுறச் சித்தராய்க் கடிமணம் பேசி, வருத்த முற்றற வருளிவார் வில்வமென் னிழலி, னிருத்தன் முற்றிய விறைவரா லயத்தை முன் னெய்தி, யருத்தி முற்றவா டைகளிழை யணிந்தடி பணிந்தான். (சங)

அமரர் நாயக னாலய மகன்றுதன் மனைபோய்த், திமில மாமறை நீதியான் முத்தினஞ் செல்லக், குமரி நீங்கிய குமுதையே மென்மல ராகப், பமர மாய்நல னுகர்ந்தனன் பருவர லொழிந்தான் (சச)

கோற்றொடிக் கையாற் குமுதையுங் கொண்கனைத் தழீஇ, யாத்தன் மார்பகத் தருப்பிள முலைக்குவடழுத்தி, யூற்று தேமலர்த் தொங்கலு மணியுமவி

ட் டொழியத், தோற்று காமவெள் ளத்திடைத் து
ளைந்தழுந் தினளால். (சரு)

தேங்கு மானந்தக் கடலிடைத் தினந்தினந் திளை
த்து, நீங்கி னுயிர் நீங்குவ தாகியநிலைமை, யோ
ங்கி னாவ ருழுவலன் பென்னென வுரைக்கேன்,
பாங்கி னற்சில பகலவ ணிருந்தனர் களித்தார். ()

ஆய்ந்த சந்திர குத்தனங் களவளா வெழில்கள்,
வாய்ந்த தன்னகர்க் சேருவா னுரைப்பமஞ் சுளனு
ஞ், சாய்ந்த மெல்லிடைக் குமுதைக்குந் தகும்பொ
ருள் பலவு, மீந்தி யாவர்க்கும் வரிசைசெய் தேகு
மா விடுத்தான். (சஎ)

தந்தை தாய்தமர் தம்மொடுந் தன்பதிக் கேகி, யந்
தில் வீற்றிருந் தருளிய நாதனை யணங்கோ, டெந்த
நாளுமன் பேத்தியின் புற்றுவாழ்ந் திருந்தான், சிந்
தை யோகையிற் றிளைத்திடுஞ் சந்திர சூடன். (சஅ)

வதுவை யாற்றிய திறத்தினை வகுத்தன மறைவீர்
மதுவி ராவிய மலர்நிறை கூவிள மருங்கு
பொதுவ தாயரு டினந்தினம் பூப்பவர் சீர்த்தி
கதுவு மான்மியங் கற்றவர் புறமதங் கல்லார். (சகூ)

வில்வ மூலத்தில் வீற்றிருந் தருளிய விமலர், சொ
ல்வி ராவிய, மான்மியந் துகளறத் தெரிப்போர், கல்
வி கேள்விகண் மிகுந்துநா வலருங்கை கூப்புநர், மெ

ல்வ மோடிருந் தியாவையு மியாவர்க்குந் தெரிப் பார். (௫0)

வானம் வேண்டினுந் வைகுந்தம் வேண்டினுஞ் சிவனூர், தானம் வேண்டினுந் தத்துவங் கடந்தருள் கூடு, ஞானம் வேண்டினு நல்குநற் கூவிள நிழலி, ஊன நீங்கவீற் றிருந்தவர் புராணமோர்ந் தவர் க்கே. (௫௧)

பழுது தீர்திரு மூலநா தரைப்பகர் புராண, முழுது மோர்தலகூ டாதெனின் மொழிந்தவோர் சருக்கம், விழும மோடுதே ருகவது மேவுரி தேனு, மெழுது மோர்கவி யாயினுந் தெரிகவின் புறு வோர். (௫௨)

பொருள்க ளாய்வதற் கறிவில ராயினும் பொருள்க, ளொருவு றுதசொல் மாத்திர முரைக்கமற் றதுவு, மருவு றுதெனில் வரைந்தபுத் தகந்தவிர் சிறுத்திப், பெருகு மோகையி னருச்சனை புரிகபீ டுறுவோர் (௫௩)

படிக்க வலலரல் லார்களும் படிப்பவர் மாட்டுத், தொடுக்கு மன்பினூற் கேட்குழ்ந் தவர்தமக் கிரும் பொன், கொடுக்க வீயவல் லார்கொடுப் பிக்ககூ விளத்தி, னடுக்கு நாயக ரருளினை வேண்டுவோர் வலரே. (௫௪)

நின்னூர மரவூர நீழலி னண்ணினூர் புராணந் தன்னோ யோதுந ரோதுவிக் குநர்தமக் கெல்லாம்

பொன்னை வீசுநர் பொன்னுலகரசனாய்ப் புரிவா
ரன்னம் வீசுந ரன்னமூர் பவனுலகமர்வார். (நிரு)

பரிகள் வீசுநர் பருமவான் களிறுவீசுநர்க, ளிர
தம் வீசுநரினமணிச் சிவிகைவீசுநர்க, ளுரிய வா
ழ்க்கைநாளுலந்துழி யுதவுமூர் திகண்மேற், பரவ
வானவரிவர்ந்துபோய்ப் பரகதி சேர்வார். (நிசு)

வரிந்து வைப்பவர் வரிந்தொரு வருக்களிப் பவ
ரும், வரிந்த வன்னமொவ் வொன்றுக்கு மெளர்சிவ
புரத்தில், விரிந்த வொவ்வொரு கற்பங்கண் மேவுவ
ரென்றாற், றெரிந்த விக்கதைப் பெருமையாருள்ள
வா தெரிப்பார். (நிஎ)

என்று சூதமா தவமுனி யிருடியர் கேட்ப, வன்
று கூறிய திருமூல நாதனா ரருளை, யின்று கூறினர்
கேட்குநர் யாரும்வான் கதியி, னொன்றி யானந்த
வெள்ளத்துண் முழுகியொன் றுவார். (நிஅ)

வாழ்க வில்வமூலத்தினி தமர்ந்தருள் வள்ளல்,
வாழ்க குங்கும சவுந்தரி வாழ்கபூ வாளூர், வாழ்க
வந்நகர் மான்மியங் காவிரி நாடு, வாழ்க வையக
மூன்றினு மறைநெறி வாழ்க. (நிகூ)

கல்யாணச்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—அஅரு.

பூவாளூர்ப்புராண முற்றிற்று.

# பிழைதிருத்தல்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|---|
| ககக | ரு | ங | மெழித்தலு. | மழித்தலு. |
| ககச | அ | உ | நினனல. | நினறனல. |
| ககரு | கரு | ச | ஞெஞெனுந. | ஞெனுந. |
| ககஎ | உச | க | விலலவட். | வில்லவட். |
| சஉ0 | ஙஅ | உ | பாரயை. | யாரையு. |
| கஙஉ | உங | உ | பிருசி. | பிரசி. |
| கஙரு | ஙகூ | க | முபபதரு. | முப்பதஞ. |
| ஷை | ச0 | ச | லிமவரை. | விமவரை. |
| கசஉ | எ0,, | க | பராற்த. | பாராச்சு. |
| ஷை | எஉ | உ | ஞெருவ. | ஞெருவ. |
| கசச | எஎ | ஙு | வெப்பறு. | வெப்புறு |
| கருஅ | உஉ | ரு | தான். | தாா. |
| கரு0 | க | க | பன்றி. | வனறி. |
| கருரு | உச | ச | தனன. | தனள. |
| கஎச | உரு | உ | கோலனில். | கோலவில். |
| கஎரி | ங | க | விமலர். | விமலா. |
| கஅகூ | ருரு | உ | முகி. | முறி. |
| ககூஉ | அ | உ | னபோல. | னபோல. |

☞ சிறப்புப்பாயிரம் ச-ம்பாட்டு ங-ம் வரியில் "மாற" என்பதை "மால்" எனவும், கங-ம் பாட்டு முதல் வரியில "யிஞட்சி" என்பதை "யீஞட்சி" எனவும் திருத்திக் கொள்க.

கணபதிதுணை.

# சருக்கவகராதி.